# திருப்பனந்தாள் காசிமடத்துச் செப்பேடுகள்



செ. இராசு

# திருப்பனந்தாள் காசிமடத்துச் செப்பேடுகள்

பதிப்பாசிரியர்
**புலவர் செ. இராசு எம்.ஏ., பிஎச்.டி.,**
பேராசிரியர், கல்வெட்டியல்துறை
தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்



வெளியீடு
**கொங்கு ஆய்வு மையம்**
ஈரோடு – 11.

| | | |
|---|---|---|
| வெளியீடு | : | குமர குருபரர் இலக்கிய ஆய்வு மாநாடு, காசி |
| நாள் | : | 4.10.1999 |
| செப்பேடுகள் உரிமை | : | காசிமடம், திருப்பனந்தாள் |
| பதிப்பாசிரியர் | : | புலவர். செ. இராசு, தஞ்சாவூர். |
| நூல் கிடைக்குமிடம் | : | கொங்கு ஆய்வு மையம்<br>3 பி, வெங்கடேசுவரா நிவாஸ்<br>130/2 வள்ளியம்மை வீதி<br>நாராயணவலசு - நசியனூர் ரோடு<br>ஈரோடு - 638 011.<br>தொலைபேசி : 218789/ விரிவு 44 220940 |
| பக்கம் | : | 87 + 38 செப்பேடுகள் |
| விலை | : | ரூ. 100/- |
| ஒளி அச்சு | : | வீனை கம்ப்யூட்டர்<br>பிரப் ரோடு, ஈரோடு - 638 001. |
| அச்சிட்டோர் | : | அலமு பிரிண்டிங் ஒர்க்ஸ்,<br>சென்னை - 600 014. |




**இந்நூல்**

**திருப்பனந்தாள் காசித் திருமடத்தின்**

**அருட்கொடையால் வெளியிடப்படுகிறது.**




பிரபந்த வேந்தர் குமரகுருபரர்

## காணிக்கை

எனக்கு உண்டியும் உறையுளும் அளித்துத்

தமிழறிவோடு வரலாற்றுணர்வையும் கல்வெட்டு

ஆர்வத்தையும் ஊட்டி என்னை ஆளாக்கிய

காசித் திருமடத்திற்குச் செல்லும்போதெல்லாம்

தாயன்புடன் இன்னுரையாடி ஆசீர்வதித்து

என் வரலாற்றுப் பணிகளை ஊக்குவிக்கும்

திருப்பனந்தாள் காசிமடத்து அதிபர்

கயிலைமாமுனிவர் திருவளர்திரு காசிவாசி

முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள்

அவர்களின்

பொன்னார் திருவடிக் கமலங்கட்கு

இந்நூலைக் காணிக்கையாகப்

படைக்கின்றேன்.

செ. இராசு

# அணிந்துரை

*முனைவர் கதிர். மகாதேவன்*
**துணைவேந்தர்**
**தமிழ்ப் பல்கலைக்கழகம்**
**தஞ்சாவூர் – 613 005.**

சைவமும் செந்தமிழும் தழைக்கப் பாடுபடும் திருமடம் திருப்பனந்தாள் காசிமடம் ஆகும். கங்கைக்கரையில் மடம் நிறுவி இந்திய ஒருமைப்பாட்டுக்கு வழிவகுத்த இப்பெரும் அறநிலையத்தின் முதல்வர் அருளாளர் குமர குருபர சுவாமிகள் அவர்கள் ஆவார் (1625 - 1688).

திருச்செந்தூர், மதுரை, தருமபுரம், சிதம்பரம், காசி ஆகிய திருத்தலங்களில் தங்கிச் சைவ சமயத்தினைக் குமரகுருபர சுவாமிகள் தழைக்கச் செய்தார். அன்னார் தோற்றுவித்த திருமடத்தில் வாழையடி வாழையென இன்று அருட்செங்கோலோச்சி வரும் பெருமை கயிலைமாமுனிவர் திருவளர் திரு. காசிவாசி முத்துக்குமரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களைச் சாரும்; அனைத்துலகச் சைவப் பெருமன்றத்தின் தலைவராக விளங்கி, அவர்கள் ஆற்றிய அரும்பணிகள் பலப்பல; ஆலம் விழுதுகள் போல் தமிழ்நாட்டின் – இந்தியாவின் பல இடங்களில் உள்ள கோயில்களிலும், சமய நிறுவனங்களிலும் அறக்கட்டளைகளை நிறுவிச் சைவ சித்தாந்த சாத்திரங்களையும், தோத்திரங்களையும், இ லக்கியங்களையும் பரப்பிவரும் அவர்தம் சீரிய தொண்டினை உலகு அறியும்.

வரலாற்றுச் சிறப்புமிக்க காசிமடத்தில் அரிய 24 செப்பேடுகள் பாதுகாக்கப் படுகின்றன. அவற்றை முதல் முறையாகத் தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறையினர் 1982 ஆம் ஆண்டு படி எடுத்துள்ளனர்.

இச் செப்பேடுகளின் மூல பாடத்தைப் பதிவு செய்தவர் தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறையில் பணியாற்றிய புலவர் செ. இராசு அவர்கள். அன்னார் ஓய்வு பெற்ற பின்னரும் பல்கலைக்கழக மானியக் குழு நல்கையுடன் கல்வெட்டு ஆய்வை மேற்கொண்டுள்ளார்.

ஈரோட்டைச் சேர்ந்த புலவர் செ. இராசு திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரியில் தனித்தமிழ் பயின்று புலவரானவர் (1955 - 1959). உயர்நிலைப் பள்ளியில் தமிழாசிரியராக 20 ஆண்டுகளுக்குமேல் பணிபுரிந்த புலவர். செ. இராசு, 1.2.1982 இல் தமிழ்ப் பல்கலைக் கழகக் கல்வெட்டியல் துறையில் விரிவுரையாளராகவும், இணைப்பேராசிரியராகவும், பேராசிரியராகவும், துறைத்தலைவராகவும் உயர்நிலை ஆய்வு மேற்கொண்டு அரும் பணியாற்றியவர்.

15.9.1983 இல் தமிழ்ப் பல்கலைக் கழகத்தின் மூன்றாம் ஆண்டுத் தொடக்கவிழாவில் வெளியிடப்பெற்ற அவரது 'தஞ்சை மராட்டியர் செப்பேடுகள்' என்னும் நூலே தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் முதல் வெளியீடாகும். அந்நூல் தமிழ் வளர்ச்சித் துறையின் முதல் பரிசினைப் பெற்றது.

அதைத் தொடர்ந்து தஞ்சை மராட்டியர் கல்வெட்டுகள் கொங்குநாட்டுச் சமுதாய ஆவணங்கள், சேதுபதி செப்பேடுகள், தொண்டைமான் செப்பேடுகள், சோழமண்டல சதக வரலாற்றுமுறைப் பதிப்பு ஆகிய நூல்களையும் புலவர் செ.இராசு தமிழ்ப் பல்கலைக் கழக வாயிலாக வெளியிட்டுள்ளார்.

திருப்பனந்தாள் காசிமடத்தில் பயின்று கல்வெட்டறிவை அமரர் பேராசிரியர் கே.எம்.வேங்கடராமையா அவர்கள் மூலம் பெற்ற புலவர் செ.இராசு நன்றியுணர்ச்சிடன் காசிமடத்துச் செப்பேடுகளைத் தனி நூலாக உருவாக்கியுள்ளார். இந்நூல் மூலபாடத்துடன் உரிய செப்பேடுகளின் ஒளிப்படங்களுடன் வெளிவருவது பெரிதும் பாராட்டிற்குரியது.

17,18,19, ஆம் நூற்றாண்டு வரலாற்றை உருவாக்க கம்பெனிச் சான்றுகளையே நாடவேண்டிய நிலையில் உள்நாட்டு ஆவணங்களான கல்வெட்டு, செப்பேடு, ஓலை ஆவணங்கள் பலவற்றைத் தொகுத்து நூல்வடிவில் தந்து சிறப்புமிகு வரலாற்றுப் பணி புரிந்துள்ள புலவர் செ.இராசு அவ்வரிசையில் மீண்டும் ஒரு நூலாகக் காசிமடத்துச் செப்பேடுகள் என்னும் நூலை வெளியிடுகிறார். அவர் முயற்சியைப் பெரிதும் பாராட்டுகிறேன்.

சிறப்புமிகும் இந்நூல் காசிமாநகரில் நடைபெறும் குமரகுருபரர் இலக்கிய ஆய்வு மாநாட்டில் வெளியிடப் பெறுவது மிகவும் பொருத்தமுடையதாகும். தம் பட்டறிவு தோன்ற இந்நூலை நன்முறையில் புலவர் செ.இராசு பதிப்பித்துள்ளார்.

தமிழ்நாட்டு வரலாற்றுலகிற்குக் கொடையாக உருவாகியுள்ள 'காசிமடத்துச் செப்பேடுகள்' என்னும் இந்நூல் உருவாவதற்கு ஆக்கமும் ஊக்கமும் அளித்துப் புலவரவர்களை ஆதரித்த காசிமடத்து அதிபர் திருவளர் திரு. முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்களையும், நூல் பதிப்பாசிரியர் புலவர் செ.இராசு அவர்களையும் பாராட்டுவதில் பெருமகிழ்ச்சி அடைகின்றேன்.

கதிர் மகாதேவன்

தஞ்சாவூர்
18.9.99

# பதிப்பாசிரியர் முன்னுரை

## *காசிமடம்*

தென்பாண்டி நாட்டில் தாமிரபரணி ஆற்றங்கரையில் உள்ள ஊர் கைலாசபுரம். அங்கு வாழ்ந்த வேளாண்குலச் செம்மலான சண்முகசிகாமணிக் கவிராயருக்கும், அவரது அருமைத் துணைவியார் சிவகாமசுந்தரி அம்மையாருக்கும் திருமகனாகப் பிறந்தவர் குமரகுருபரர். அவர் பிறந்த நாள் 24.6.1625 ஆகும்.

ஐந்தாண்டளவும் ஊமையாக இருந்த குமரகுருபரர் திருச்செந்தூர் முருகப்பெருமான் அருளால் பேசும் ஆற்றல் பெற்றுக் 'கந்தர் கலிவெண்பா' பாடினார். திருமலை நாயக்கர் ஆதரவில் மதுரையில் இருந்தபோது 'மீனாட்சியம்மை பிள்ளைத் தமிழ்' பாடினார்.

திருவாரூரில் தங்கியிருந்தபோது 'திருவாரூர் நான்மணிமாலை' பாடினார். தருமையாதீனத்தின் நான்காம் தலைவர் தவத்திரு. மாசிலாமணி தேசிகரால் உபதேசம் செய்யப்பெற்றபின் குருநாதர் மீது 'பண்டார மும்மணிக் கோவை' பாடினார். யாப்பிலக்கணம் கற்போருக்காகச் சிதம்பரத்தில் 'சிதம்பரச் செய்யுட்கோவை' பாடினார்.

பின் குருவருளால் காசி சென்று 'காசிக் கலம்பகம்' பாடினார். 'சகலகலாவல்லிமாலை' பாடி இந்துஸ்தானி மொழி பேசும் ஆற்றல் பெற்று டில்லியை ஆண்ட இசுலாமிய அரசனிடம் இடம் பெற்றுக் காசியில் 'குமாரசுவாமி மடம்' நிறுவினார். 8.5.1988 இல் காசியிலேயே முத்தியடைந்தார்.

அவருக்குப் பின்வந்த நான்கு ஆதீனத் தலைவர்கள் தவத்திரு காசிவாசி சொக்கநாத சுவாமிகள், தவத்திரு காசிவாசி அருணாசல சுவாமிகள், தவத்திரு காசிவாசி அம்பலவாண சுவாமிகள், தவத்திரு காசிவாசி சடையப்ப சுவாமிகள் ஆகியோர் காசியிலேயே தங்கி மடத்தில் திருத்தொண்டு செய்தனர்.

ஐந்தாவதாக அருளாட்சிக்கு வந்த தவத்திரு காசிவாசி தில்லைநாயகத் தம்பிரான் சுவாமிகள் அவர்கள் கி.பி. 1720 வாக்கில் திருப்பனந்தாளில் காசித் திருமடத்தை நிறுவினார்கள்.

## *செப்பேடுகள்*

திருப்பனந்தாள் காசிமடத்தில் 24 செப்பேடுகள் பாதுகாக்கப்பட்டு வருகின்றன. வரலாற்றுச் சிறப்புமிக்க அச்செப்பேடுகளைக் கயிலைமாமுனிவர் திருவளர்திரு காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் திருவுளப்பாங்கின்படி 1982 ஆம் ஆண்டு தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறையினர் முதல் முறையாகப் படி எடுத்தனர். படி எடுக்க சுவாமிகள் அவர்கள் எல்லா வசதிகளையும் செய்து கொடுத்தார்கள்.

மைய அரசின் தொல்லியல் அளவீட்டுத் துறையின் கல்வெட்டுப் பிரிவினர் மைசூரிலிருந்து வந்து 1989 ஆம் ஆண்டு காசிமடத்துச் செப்பேடுகள் அனைத்தையும் படி எடுத்தனர்.

## *மொழி அமைதி*

காசிமடத்தில் உள்ள 24 செப்பேடுகளில் தமிழ்ச் செப்பேடுகள் 18, வடமொழிச் செப்பேடுகள் 3, தெலுங்குச் செப்பேடுகள் 2, மராத்திமொழிச் செப்பேடு 1.

வடமொழிச் செப்பேடுகளில் இரண்டு கிரந்த எழுத்துக்களிலும், ஒன்று நாகரி எழுத்திலும் உள்ளன. தமிழ்ச் செப்பேடுகள் பலவற்றில் இடையிடையே வடசொற்களை எழுதக் கிரந்த எழுத்துக்களைப் பயன்படுத்தியுள்ளனர். பத்துத் தமிழ்ச் செப்பேடுகளில் கொடை கொடுப்பதால், ஏற்படும் பயனையும், அதைக் காப்பாற்றினால் பெறலாகும் புண்ணியத்தையும் கூறும். வடமொழித் தான சுலோகங்கள் கிரந்த எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளன.

சில செப்பேடுகளில் 'ஸ்ரீ ராம ஜெயம்' 'ஆறுமுகம் சகாயம்' போன்ற தொடர்கள் பெரிய தெலுங்கு எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளன. 'சத்யம்' என ஒரு செப்பேட்டில் கிரந்த எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளது.

தெலுங்குச் செப்பேடு ஒன்றிலும் வடமொழிச் செப்பேடுகளிலும் அரசன் பெயர் பெரிய எழுத்துக்களில் பொறிக்கப்பட்டுள்ளது.

## *செப்பேட்டு அமைப்பு*

எல்லாச் செப்பேடுகளுமே பாண்டியர், சோழர் செப்பேடுகள் போல் அல்லாமல் விசயநகரக் காலச் செப்பேடுகளுக்குப் பின் வந்த அமைப்பான நீள்சதுர வடிவில் அமைந்துள்ளன. இரண்டு செப்பேடுகளைத் தவிர மற்ற எல்லாச் செப்பேடுகளிலும் கைப்பிடி போன்று அமைப்பு உள்ளது. பதின்மூன்று செப்பேடுகளில் சிறு துளை கைப்பிடியின் மையப்பகுதியில் காணப்படுகிறது. பதினைந்து செப்பேடுகளில் கைப்பிடிப்புப் பகுதியிலோ அல்லது அதன் கீழ்ப் பகுதியிலோ அழகிய வரைகோட்டு ஓவியங்கள் உள்ளன.

அவை சமயச் சிறப்புடன் அந்தந்தக் கோயில்கட்கு ஏற்றவாறு சில அழகிய அமைப்பில் உள்ளன. மிக இன்றியமையாத ஓவியங்களை ஒத்த செப்பேட்டு வரைகோட்டு ஓவியங்கள் பற்றி இன்னும் விரிவாக ஆய்வு செய்யப் பெறவில்லை.

ஏழு செப்பேடுகளில் ஒரு பக்கம் மட்டும் எழுதப் பெற்றுள்ளன. மற்ற செப்பேடுகள் இருபுறமும் எழுதப் பட்டுள்ளன. மிக மெல்லிய கோடு வரைந்து எழுதும் வரிகளை நேராக எழுதியுள்ளனர். மூலச் செப்பேட்டைப் பார்த்தாலே அக்கோடுகள் தெரியும்.

முதலில் ஓலையில் எழுதப்படும் செய்திகள் 'பட்டயம்' என்றும், எழுதப்பட்ட செப்பேடு 'தாம்பிர சாசனம்' என்றும் கூறப்பட்டுள்ளது.

உ (பிள்ளையார் சுழி) 'ஸ்வஸ்தி ஸ்ரீ'. போன்ற மங்கலச் சொல்லோடும், திருச்சிற்றம்பலம், வேதனாயகம் துணை, ஸ்ரீ விஸ்வேஸ்வரரன்னபூரணி சகாயம், கற்பகங் கந்தன் துணை என்ற இறை வணக்கத்துடனும் சில செப்பேடுகள் தொடங்குகின்றன. பிள்ளையார் சுழி, சுபமஸ்து, விஸ்வலிங்கம் துணை போன்ற எழுத்துப் பொறிப்புக்களோடு சில செப்பேடுகள் முடிவடைகின்றன.

சில செப்பேடுகளில் சந்திர – சூரியர் வரையப்பட்டுள்ளனர். சந்திரன் பிறைக்கோட்டு வடிவத்திலும், சூரியன் வட்ட வடிவிலும் பொறிக்கப்பட்டுள்ளனர். சந்திர சூரியர் உள்ளவரை இக்கொடைகள் நின்று நிலைக்க வேண்டும் என்பது இதன் பொருளாகும்.

*தானம் அளித்தோர்*

மதுரை நாயக்கர், புதுக்கோட்டைத் தொண்டைமான், அறந்தாங்கித் தொண்டைமான், சிவகங்கை அரசர், துறையூர்ப் பாளையக்காரர், பாப்பாநாடு ஜமீன்தார், பல்வேறு வணிகர்கள் உட்படப் பறங்கிப்பேட்டை மக்கள், பறங்கிப்பேட்டை டச்சு நாட்டுக் கம்பெனியினர், தஞ்சை மராட்டியர், மராட்டியத் தலைவர், தில்லை மூவாயிரவர் ஆகியோர் கொடை அளித்துள்ளனர்.

*ஆதீனத் தலைவர்கள்*

பத்துச் செப்பேடுகளில் நான்கு காசிமடத்து அதிபர்கள் பெயர்கள் குறிக்கப்பட்டுள்ளன.

காசிவாசி தில்லைநாயகத் தம்பிரான் (1725, 1729, 1732, 1736, 1745)
காசிவாசி குமர குருபரத் தம்பிரான் ( 1763, 1782)
காசிவாசி சிதம்பர நாதத் தம்பிரான் ( 1790)
காசிவாசி சடையப்பத் தம்பிரான் ( 1796, 1800)

ஆகியோர் பெயர்கள் செப்பேடுகளில் காணப்படுகிறது.

காசிமடத்து அதிபர்களைத் தருமபுர ஆதீனத் தலைவர்களின் சீடர்கள் என்பதன் திருமட மரபிற்கு ஏற்ப எட்டுச் செப்பேடுகளில் அவ்வாறே குறிக்கப்பட்டுள்ளது.

காசி மடத்துக் செப்பேடுகளில் காசிமடத்து அதிபர்களின் குருநாதர்களாக
தவத்திரு திருஞான சம்மந்த பண்டாரம் (1729, 1732, 1736)
தவத்திரு சிவஞான சம்மந்த தேசிகர் ( 1763)
தவத்திரு முத்துக்குமாரசாமி தேசிகர் ( 1782)

தவத்திரு சிவஞான சம்மந்த தேசிகர் ( 1790, 1796)
தவத்திரு திருஞான சம்மந்த தேசிகர் (1800)

ஆகியோர் குறிக்கப்பட்டுள்ளனர்.

சண்முகத் தம்பிரான், முத்தையத் தம்பிரான், அம்பலவாணத் தம்பிரான், அட்சயலிங்கத் தம்பிரான் போன்ற சமய அடியார்கள் சிலரும் குறிக்கப்பட்டுள்ளனர்.

## *காசிக் கொடைச் செப்பேடுகள்*

பதினொரு செப்பேடுகள் தமிழக மன்னர்களும், பாளையக்காரர்களும் காசிக்குக் கொடுத்த கொடையை விளக்கிக் கூறுகின்றன. காசிக்குக் கொடுத்த கொடையப் பெரும்பாலும் காசிமடம் மூலமாகவே கொடுக்கப் பட்டுள்ளன. அவை பெரும்பாலும் காசிமடம் அதிபர்களின் வேண்டுகோளுக்கு இணங்கவே கொடுக்கப்பட்டிருக்கலாம்.

1. மதுரை விசையரங்க சொக்கநாத நாயக்கர் 1726 ஆம் ஆண்டு சின்னம்பட்டி என்ற ஊரையும்,

2. அறந்தாங்கி அரசு அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார் 1729 ஆம் ஆண்டு கீழ்பாப்பனூர் என்ற ஊரையும்,

3. புதுக்கோட்டை விசயரகுநாத ராயத் தொண்டைமானார் 1732 ஆம் ஆண்டு துருவாசபுரம் என்ற ஊரையும், 1763 ஆம் ஆண்டு வாழைக்குறிச்சி என்ற ஊரையும்,

4. பாப்பாநாடு ஜமீன்தார் இராமலிங்க விசையாத்தேவர் 1736 ஆம் ஆண்டு திருமாஞ்சோலை என்ற ஊரையும்,

5. துறையூர்ப் பாளையக்காரர் வெங்கடாசல ரெட்டியார் 1745 ஆம் ஆண்டு அபிநவமங்கலம் என்ற ஊரையும்,

6. சிவகங்கை அரசர் அரசு நிலையிட்ட முத்து வடுகநாதப் பெரிய உடையாத்தேவர் 1763 ஆம் ஆண்டு வள்ளைக் குளம் என்ற ஊரையும், ஒச்சமதட்டு என்ற ஊரையும்,

7. புதுக்கோட்டை அரசர் விசயரகுநாத ராயத் தொண்டைமானார் 1790 ஆம் ஆண்டு ஈரவயல் நிலத்தையும்,

8. புதுக்கோட்டை அரசர் திருலையப்ப ராயத் தொண்டைமானார் 1796 அன்று கூடலூர் என்ற ஊரையும்,

9. புதுக்கோட்டை அரசர் ராசா விசய ரகுநாத பாதர் தொண்டைமானார் 1800 ஆம் ஆண்டு கூத்தனூர் பரந்தலைவயல், புதுவயலையும்

காசிக்குக் கொடையாக அளித்துள்ளனர். இவற்றின் மூலம் பல அறக்கொடைகள் நடைபெற்றுள்ளன. மடங்கள், சத்திரங்கள் ஆகியவையும் அமைக்கப்பட்டுள்ளன.

## *தில்லைச் செப்பேடுகள்*

1. மராட்டிய மன்னர் சகசி காலத்தில 1711 ஆம் ஆண்டு சோழமண்டலத்துப் பலபகுதி உழவர்கள் வேளூர் அம்பலவாணத் தம்பிரான் வழியாக நெல்லும், மகமையும் சிதம்பரத்திற்குக் கொடுத்துள்ளனர்.

2. சண்முகத் தம்பிரான் 1747 ஆம் ஆண்டு தில்லைத் திருப்பணிகள் தொடங்கி நடத்தும்போது பறங்கிப்பேட்டை ஊரவர்களும் பல்வேறு வணிகர்களும் மகமைக் கொடை கொடுத்துள்ளனர்.

3. அதே அன்று சண்முகத் தம்பிரான் திருப்பணிக்கு டச்சு நாட்டு வணிகக் குழுவினர் மகமைக் கொடை அளித்துள்ளனர்.

4. முத்தையத் தம்பிரான் தில்லைத் திருப்பணி செய்யும் போது தில்லை மூவாயிரவர் நாள்தோறும் அரைக்காற் காசும், வாய்ப்புள்ளோர் அதற்கு மேலும் பொருட்கொடை அளித்துள்ளனர்.

## *நாஞ்சில் நாட்டு அரசர்கொடை*

நாஞ்சில் நாட்டுக் கீழ்ப்பேரூர் மன்னர் வீர ரவிபால மார்த்தாண்ட வர்மராய சிறவாய் மூத்தவர் தருமபுரம் பண்டாரம் அவர்கட்கு தேரூர் வில்லிகள் பற்றில் 1734 ஆம் ஆண்டு கொடை கொடுத்ததை ஒரு செப்பேடு கூறுகிறது.

## *மராத்திச் செப்பேடு*

வீரசீ சாகுநாத் என்பவர் தேவநாதபுரத்தில் நிலம் வாங்கிக் கட்டிய 14 வீடுகளில் ஒன்றைப் பிரபாகர துவிவேதிக்கு 1654 ஆம் ஆண்டு கொடுத்ததை மராத்திச் செப்பேடு ஒன்று விளக்குகிறது.

## *குறைச் செப்பேடுகள்*

தமிழில் மூன்றும் வடமொழியில் ஒன்றுமாக நான்கு குறைச் செப்பேடுகள் உள்ளன. அவற்றில் ஒன்று திருவையாற்றுக்கு உரியவை. மற்றொன்று புள்ளிருக்கும் வேளூருக்கு

உரியவை. ஒன்றில் சேதுபதியரசர் தம் மெய்க்கீர்த்தித் தொடர்கள் காணப்படுகின்றன.

## *வடமொழிச் செப்பேடுகள்*

மூன்று வடமொழிச் செப்பேடுகளும் சிதம்பரம் தொடர்பானவை. கி.பி. 1311 இல் மாலிக் காபூர் படை எடுத்ததிலிருந்து தொடர்ந்து 76 ஆண்டுகள் சிதம்பரத்தில் பூசை இல்லாத நிலையையும், விசயநகர முதல் வம்சமான சங்கம அரசன் இரண்டாம் ஹரிஹரன் காலத்தில் மீண்டும் நடராசரை எழுந்தருளச் செய்து 1387ஆம் ஆண்டு அளித்த கொடைகளையும், புன்னாத்தூர் என்ற ஊர் விசயநகர அமைச்சன் முத்தய்ய தண்ட நாயகன் பெயரால் 'முத்தையதண்ட நாயகபுரம்' என்று பெயரிட்டுக் கொடையாக அளிக்கப்பட்டதையும் கூறுகின்றன. குறைச் செப்பேடு நடராசர் புகழ்பாடுகிறது.

## *செப்பேடுகள் பதிப்பு*

17 ஆண்டுகட்குமுன் திருப்பனந்தாள் திருமடத்துத் தலைவர் கயிலை மாமுனிவர் திருவளர்திரு காசிவாசி முத்துக்குமாரசாமித் தம்பிரான் சுவாமிகள் முன்னிலையில் இச்செப்பேடுகளைப் படி எடுக்கும் வாய்ப்பைப் பெற்றேன். 1983 ஆம் ஆண்டு என்னால் தொகுக்கப்பட்டுத் தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் முதல் நூலாக வெளிவந்த 'தஞ்சை மராட்டிய செப்பேடுகள்' என்னும் நூலில் மராட்டியர் தொடர்பான இரண்டு செப்பேடுகள் மட்டும் வெளிவந்தன.

காசிமடம் சென்று சுவாமிகளிடம் உரையாடும்போதெல்லாம் அவர்கள் செப்பேடுகள் பற்றிப் பேசுவதுண்டு. திருப்பனந்தாள் காசிமடத்தில் செப்பேடுகள் படி எடுத்த பின்னரே தருமபுர ஆதீனத்திலும், திருவாடுதுறை ஆதீனத்திலும் உள்ள செப்பேடுகளைப் படி எடுக்கும் வாய்ப்பை நான் பெற்றேன்.

காசிமடத்துச் செப்பேடுகளைப் படி எடுக்கத் தூண்டி நல் வாய்ப்பை ஏற்படுத்தித் தந்தவர்கள் திருப்பனந்தாள் செந்தமிழ்க் கல்லூரி முன்னாள் முதல்வரும், என் கல்வெட்டியல் குருநாதரும் ஆகிய அமரர் பேராசிரியர் கே.எம். வேங்கடராமையா அவர்களாவார்கள். அவர்கள் இச்செப்பேடுகளை நான் பதிப்பிக்க வேண்டும் என்று விரும்பினார்கள்.

காசியில் நடைபெறும் குமரகுருபரர் இலக்கிய ஆய்வு மாநாட்டின்போது இச்செப்பேடுகளைப் பதிப்பிக்கும் பணியை மேற்கொள்ளத் தூண்டியவர்கள் திருப்பனந்தாள் ஆதீனத் தலைவரவர்களே ஆவார்கள். அவர்கள் விரும்பியவாறு இந்நூல் வெளிவருகிறது.

பணியைத் தொடங்கத் தேவையான பொருட்கொடையையும் நல்கி இந்நூல் தொகுப்பை ஊக்குவித்த நம் திருப்பனந்தாள் ஆதீனத் தலைவர் கயிலைமாமுனிவர் திருவளர்திரு. காசிவாசி முத்துக்குமாரசுவாமித் தம்பிரான் சுவாமிகள் அவர்கட்கு மனம்

மொழி மெய்களிலான என் பணிவான வணக்கங்களையும் நன்றியையும் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

நான் சந்திக்கும் பொழுதெல்லாம் 'திருப்பனந்தாள் காசிமடத்துச் செப்பேடுகள் உரிய படங்களுடன் உங்கள் தஞ்சை மராட்டியர் செப்பேடுகள் போல வரவேண்டும்' என்று ஊக்கம் ஊட்டிய திருப்பனந்தாள் காசிமடத்துக் காறுபாறு சுவாமிகள் முனைவர் குமாரசாமித் தம்பிரான் அவர்கட்கு என் நன்றியைத் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

திருப்பனந்தாள் காசித் திருமடத்துக் கல்லூரியான காசிவாசி சுவாமிநாத சுவாமிகள் கலைக்கல்லூரி முதல்வர் கவிஞர் மா. வே. பசுபதி அவர்கள் வேங்கடராமையாவின் திருமகனாவார். தந்தையை யொப்ப என்மீது அன்பு கொண்டவர். அவர்களும் இந்நூல் வெளியீட்டில் ஆர்வம் கொண்டு இந்நூல் தொகுப்புப்பணிபற்றி நினைவூட்டுவார்கள். அவர்களுக்கும் என் நன்றி உரியதாகுக.

இந்நூலுக்கு அழகிய ஒர் அணிந்துரையை வழங்கியவர்கள் எங்கள் தமிழ்ப் பல்கலைக் கழகத் துணைவேந்தர் மாண்புமிகு முனைவர் கதிர். மகாதேவன் அவர்களாவார்கள். அரும்பணிகட்கிடையிலும் அணிந்துரை வழங்கிய துணைவேந்தர் அவர்கட்கு என் மனமார்ந்த நன்றி உரியதாகுக.

பல்லாண்டுகளாக என் பல பணிகட்கு உறுதுணையாயிருந்து, என்னோடு பல நிலைகளில் இணைந்து பணியாற்றி, என் வரலாற்றுப் பணிக்கு வழிகாட்டிகளாக உள்ள தமிழ்ப் பல்கலைக்கழகக் கல்வெட்டியல் துறைத் தலைவர் முனைவர். எ. சுப்பராயலு, இணைப் பேராசிரியர்கள் முனைவர். கா. ராஜன், திரு. அதியமான், திரு. ஜெயக்குமார் ஆகியவர்கட்கு என் மனமார்ந்த நன்றி.

இந்நூலுக்கு ஒளி அச்சுப் பணிகளை அன்புடன் விரைந்து செய்துதவிய ஈரோடு வினை கம்ப்யூட்டர் நிறுவனத்தாருக்கு என் நன்றி உரியதாகுக.

வரலாற்று ஆய்வாளர்களும், ஆர்வலர்களும், ஆய்வு மாணவர்களும், பேராசிரியப் பெருமக்களும் இந்நூல் பணியை ஆதரிப்பார்கள் என நம்புகிறேன். எல்லோருக்கும் நன்றி.

அன்புள்ள

தஞ்சாவூர்
18.9.99

செ. இராசு

# பொருளடக்கம்

# 1. துருவாசபுரம் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | புதுக்கோட்டைத் தொண்டைமான் |
| அரசர் | : | விசைய ரகுநாத தொண்டைமானார் ( 1730 – 1769) |
| காலம் | : | 22–7–1732 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 28 செ.மீ X 19.5 செ. மீ. |

அமைப்பும் செய்தியும் :

இச்செப்பேட்டில் துளையுடன் கூடிய கைப்பிடி உள்ளது. கைப்பிடியின் மேல் பகுதியில் சந்திர, சூரியன் உருவம் வரைகோட்டில் வரையப்பட்டுள்ளது. அதன்கீழ்ச் சிவலிங்க வடிவில் காசி விசுவநாதரும், இடப்புறம் நின்ற நிலையில் விசாலாட்சியும் வரைகோட்டு ஓவியத்தில் வரையப்பட்டுள்ளனர். அதனை அடுத்து முத்தலைச் சூலமும், இறுதியில் நந்தி உருவமும் வரையப்பட்டுள்ளன. சிவலிங்கத்திற்குக் கிரீடம் சூட்டப் பெற்றுள்ளது. அதன் கீழ்ப்புறம் செப்பேட்டுச் செய்திப் பொறிப்புக்கு முதலில் 'ஸ்ரீ ராமஜெயம்' என்று தெலுங்கில் பெரிய எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளது. பிள்ளையார் சுழியுடன் செப்பேடு தொடங்குகிறது. இறுதிப் பகுதியிலும் ஒரு பிள்ளையார் சுழி உள்ளது.

இடையிடையே சில கிரந்த எழுத்துக்களும் இறுதியில் பிறர் அளித்த கொடைகளைப் பாதுகாப்பதால் ஏற்படும் பயன் குறித்த இரு வடமொழிச் சுலோகங்களும் கிரந்த எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளன. சாசனத்தில் இறுதியில் ' சம்பிரதி ஈசுரப்பையன் கையெழுத்து' என்று காணப்பெறுகிறது.

விசைய ரகுநாதத் தொண்டைமானாரவர்கள் 22.7.1732 அன்று காசியில் விசுவேசுரர் விசாலாட்சிஅம்மன் அபிடேகம் நைவேத்தியம் அன்னதானத்துக்குத் தருமபுரம் திருஞானசம்பந்த பண்டார சன்னதி அவர்கள் சீடரான திருப்பனந்தாள் காசிவாசி தில்லைநாயகத் தம்பிரான் அவர்கள் வசம் கானாட்டுப் பகுதியில் உள்ள துருவாசபுரமான துறுமா என்ற ஊரைக் கொடையாகக் கொடுத்ததை இச்செப்பேடு கூறுகிறது. துறுமாவின் எல்லைகள் கூறப்படவில்லை.

துறுமாவின் வருவாயிலிருந்து துறுமாவில் உள்ள சிவபெருமான் திருமேனி நாதருக்கு மூன்றில் ஒருபங்கும், காசித் தர்மத்துக்கு மூன்றில் இரண்டு பங்கும் அவ்வூர் வருவாயில் இருந்து கொடையாக அளிக்கப்பட்டுள்ளது.

### செப்பேடு
### முதல் பக்கம்
### ஸ்ரீ ராமஜெயம்

1. உ சுவஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுரன் அரியராய தழ
2. விபாடன் பாஷைக்கு தப்புவராய கண்டன் மூவராயிர க
3. ண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கொடாதான் ப
4. ரிமேல் நகுலன் கரிமே லுதயன் வில்லால் விசையன் சொ
5. ல்லால்த் தருமன் வாளுக்கு வீமன் அழகுக்கு ஙங்கள் அறி
6. வுக்கு அகஸ்த்தியன் கொடைக்கு கன்னன் பூலோக புரந்தரன்
7. புட்க பேரிபட்ச பாஞ்சாலதேசஞ் சாதகமான உத்தண்ட தொர
8. த்தண்ட சண்டமதருணி மண்டலேசுரன் அஷ்ட்ட திக்கும்
9. ராசமனோ பயங்கரன் துஷ்ட்ட நிக்கிரக சிஷ்ட்ட பரிபாலன் பி
10. றிதிக் கினையான் பரசுராமன் படைகண்டு தத்தளிப்பார் கண்ட
11. ன் பாண்டிமண்டலத் தாபனாசாரியன் சோழமண்டலப்
12. பிறதிஷ்டாபானாசாரியன் தொண்டமண்டல சண்டப்
13. பிறசண்டன் சேர சோழ பாண்டிய வல்லாள பயங்கரன் பூ
14. றுவ தெட்சண பச்சிம உத்தர சத்த சமுத்திராதிபதி எம்மண்
15. டலமும் கொண்டு ஈழமுந் திறைகொண்டு யாட்பாணமு
16. ம் அழித்து கெசவேட்டை கண்டருளிய ராசாதிராசன் ராசபர
17. மேசுவரன் ராசமாத்தாண்டன் ராசகண்டீரன் ராசாக்கள் தம்பிரா
18. ன் ராசநரேந்திரன் மன்னரில் மன்னன் மன்னர்கெம்பீரன் சாடிக்கா
19. றர் கண்டன் சாமத்துரோகிகள் மிண்டன் கட்டாரிச் சாளுவன் கலங்
20. காத கண்டன் குமட்டி ராமன் சம்மட்டி நாராயனன் ஒட்டியர் தள விபா
21. டன் ஒட்டியர் மோகந் தவிள்த்தான் துலுக்கர் தள விபாடன் துலுக்கர்
22. மோகந் தவிள்த்தான் மறுமன்னியர் சுரதானன் மன்னியராட்டந் த
23. விள்த்தான் அசுபதி கெசபதி நரபதி நவகோடி நாராயணன் ஸ்ரீ வீர
24. ப் பிறதாபனாகிய அரிஅரதேவ மகாராயர் புட்கராயர் மல்லிகா
25. ற்சுனதேவ மகாராயர் விருப்பாட்சிதேவ மகாராயர் பிறபுடதேவ
26. மகாராயர் வீரநரசிங்கதேவ மகாராயர் நரசாஉடையதேவ மகாரா
27. யர் கிஷ்ட்டிணதேவ மகாராயர் சதாசிவராயர் ராமராயர் திருமலை
28. தேவ மகாராயர் சீரங்கராயர் வெங்கிடபதிதேவ மகாராயர் சிக்கரா
29. யர் ஆனைகொந்தி வெங்கிடபதிதேவ மகாராயர் ஸ்ரீரங்கதேவ
30. மகாராயர் காரியத்துக்குக் கற்த்தரான கச்சி விசுவநாத நாயக்கர் கிஷ்
31. ட்டிணப்ப நாயக்கர் வீரப்ப நாயக்கர் குமார கிஷ்ட்டிணப்ப நாய
32. கர் கஸ்த்தூரி ரெங்கப்ப நாயக்கர் முத்துக்கிஷ்ட்டிணப்ப நாயக்
33. கர் முத்துவீரப்ப நாயக்கர் திருமலை நாயக்கர் முத்துவீரப்ப
34. நாயக்கர் சொக்கநாத நாயக்கர் ரெங்ககிஷ்ட்டிண முத்துவீர

35. ப்ப நாயக்கர் ஸ்ரீ விசையரெங்க கிஷ்ட்டிண முத்துவீர சொக்க
36. நாத நாயக்கரய்யனவர்கள் பிறிதிவி ராச்சியம்பண்ணி அருளாநி
37. ன்ற சாலிவாகன சகார்த்தம் 1653 இதன்மேல் செல்லாநி
38. ன்ற பரிதாபி வருசம் ஆடி மாதம் 22 தேதி ஸ்திரவாரமும் பூறுவபட்சத்து
39. ஏகாதெசியும் மூல நட்சத்திரமுஞ் சுபநாம யோகமுந் தைது
40. லாகரணமும் பெற்ற சுபதினத்தில் ஸ்ரீமது இந்திரகுல வங்கிஷ
41. ன் அன்பில்நாடன் தென்கோடி ஆதிபன் வடகரைப்புலி வா
42. கைமாலைப் புயனான ஸ்ரீமது ரெகுனாதத் தொண்டைமானாரவர்க
43. ள் திருமலைத் தொண்டைமானாரவர்கள் ஸ்ரீமது விசையரெகு
44. நாதத் தொண்டைமானாரவர்கள் காசியில் விசுவேசுர
45. சுவாமி விசாலாட்சி அம்மன் அபிஷேகம் நைவேத்தி
46. யம் அன்னதானத்துக்குத் தருமபுரம் திருஞாந சம்ப
47. ந்த பண்டார சன்னதிச் சீஷரான காசிவாசித்

இரண்டாம் பக்கம்

48. தில்லைநாயக தம்பிரானவர்கள் பாரிசமாக
49. க் காசித் தற்மத்துக்குத் தாம்பிர சாதனப் பட்டையங் கொ
50. டுத்தபடி கானாட்டில் தூறுவாசபுரமான துறுமா நா
51. ன்கெல்லைக் குட்பட்ட நஞ்சை புஞ்சை ஏந்தல் புறவ
52 டை திட்டுத் திடல் நத்தம் படுகை நிதி நிட்சேபம் அனாதி
53. தரிசு பெருமரக்காடு மாவடை மரவடை பாசிவிலை சே
54. த்துக்காணிக்கை சொற்னாதாயம் பலசுவந்திரம் வலை இடை
55. பைங்குடி கீழ்நோக்கிய கிணறு மேல்நோக்கிய வி
56. ருட்சம் இடுகாடு படுதுறை உள்படத் துறுமாத் திருமே
57. னிநாத சுவாமிக்கு ஒரு பங்கும் காசித் தற்மத்துக்கு
58. இரண்டு பங்குஞ் சறுவமானியமாக நேமிச்சுத்
59. தாராபூறுவமாகத் தாம்பிரசாதனப் பட்டையங் கொ
60. டுத்தபடியினாலே சந்திராதித்த ருள்ளவரைக்கும்
61. புத்திர பவுத்திர பாரம்பரியமாக அனுபவித்துக் கொ
62. ண்டு தற்மத்தை உத்திரோத்திரமாய் நடத்திவிச்சுக்
63. கொண்டு சுகத்திலே யிருக்கக் கடவராகவும் இந்தத் த
64. ற்மத்துக்கு வாக்குச் சகாயம் சரீர சகாயம் அற்த்த சகாயம் ப
65. ண்ணினபேர்கள் காசியிலே கங்கைக் கரையிலே கோடி
66. சிவலிங்கப் பிறதிட்டை பண்ணின பலனை அடைவர்கள்
67. இந்தத் தற்மத்துக்கு அகிகம் பண்ணிநபேர்கள் காசியிலே
68. கெங்கைக்கரையிலே கோடி காராம்பசுவைக் கொன்

69. ற தோஷத்திலே போவாராகவும் சம்பிறிதி ஈசுரப்
70. பையன் கையெழுத்து உமந் ஸ்வதத்தாத்வி குணம்
71. புண்யம் பரதத்தானு பாலநம் பரதத்தாப ஹாரே
72. ண ஸ்வத்தம் நிஷ்பலம் பவேத்: ஸ்வதத்தாம் பரதத்தா
73. ம் வாயோகரேத் வஸுந்தராம் ஷஷ்டி வர்ஷ ஸஹ
74. ஸ்ராணி விஷ்டாயாம் ஜாயதே கிருமி:

# 2. வாழைக்குறிச்சிச் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | புதுக்கோட்டைத் தொண்டைமான் |
| அரசர் | : | விசைய ரகுநாத ராயத் தொண்டைமானார் (1730 – 1769) |
| காலம் | : | 21.2.1763 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 25 செ.மீ.X 20.5. செ.மீ. |

அமைப்பும் செய்தியும்:

இச் செப்பேடு மையத்தில் சிறு துளையையுடைய வரைகோட்டு உருவங்கள் ஏதுமில்லாத கைப்பிடியை உடையது. இரண்டாம் பக்கத்தின் இறுதிப் பகுதியில் 'ஸ்ரீராமஜெயம்' என்று தெலுங்கில் எழுதப்பட்டுள்ளது.

21.2.1763 அன்று புதுக்கோட்டை அரசர் விசைய ரகுநாத ராயத் தொண்டைமானாரவர்கள் தருமபுரம் சிவஞான சம்மந்த தேசிகர் சீடரான திருப்பனந்தாள் காசிவாசி குமரகுருபரத் தம்பிரான் அவர்கள் வசம் காசியில் அன்னதானக் கட்டளைக்காக வாழைக்குறிச்சி என்ற ஊரைக் கொடையாகக் கொடுத்ததை இச் செப்பேடு கூறுகிறது.

வாழைக்குறிச்சியின் எல்லைகளாகப் பனையூர் வடக்குக்குளம், தெற்குக்குளத்து உள்வாய், குழிபிறை வாகைவயல், கொவ்வனூர் புதுவயல், நெல்வேலி விஷமூலிகைவயல், கொத்திவயல் ஆகியவை கூறப்பட்டுள்ளன.

திருப்பனந்தாள் காசிமடத்தினர் என்றென்றும் சீஷ பரம்பரையாக இவ்வூரை அனுபவித்துக் கொள்ளலாம் என்று கூறப்பட்டுள்ளது.

இச்செப்பேட்டை பழனியப்ப வாத்தியார் என்பவர் எழுதியுள்ளார். இறுதியில் தானத்தைக் காப்பது பற்றிய வடமொழிச்சுலோகம் ஒன்று கிரந்த எழுத்தில் எழுதப்பட்டுள்ளது.

இச்செப்பேட்டில் கூறப்பட்ட எல்லையினுள் அமைந்து, தானம் அளிக்காமல் நீக்கம் பெற்றுள்ள ஈரவயலும் அதைச் சேர்ந்த 30 ஏர்ப் புன்செய் நிலமும் 25.7.1790 அன்று விசைய ரகுநாத ராயத் தொண்டைமானார் அவர்களால் காசிக்கு அன்னதானத்துக்காகக் கொடுக்கப்பட்டது என்ற விபரம் மற்றொரு காசிமடத்துச் செப்பேட்டில் உள்ளது. (எண் 3)

### செப்பேடு

### முதல் பக்கம்

### ஸ்ரீ ராமஜெயம்

1. ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் அ
2. ரியராய விபாடன் பாஷைக்குத் தப்பு
3. வராயர் கண்டன் கண்டர் கண்ட
4. ன் கண்டையப்பிறதாபன் கட்டாரி
5. சாளுவன் கண்டநாடு கொண்டு
6. கொண்டநாடு கொடாதான் ஒருப
7. ரிகொண்டு திரள்பரி வெட்டு முபைய
8. குலோத்துங்கன் எம்மண்டலங் கொ
9. ண்டு யீழமுந் திறைகொண்ட ரா
10. சாதிராசன் ராசகெம்பீரன் ராசா
11. க்கள் தம்பிரான் கோட்டத்து மன்
12. னியர் கண்டன் சொரிமன்னியர்
13. சூரியன் கெடிமன்னியர் காலாந்
14. தகன் தொண்டமண்டல ஸ்தாபநா
15. சாரியன் சோழமண்டலப் பிறதி
16. ஷ்டாபநாரியன் பாண்டிமண்டில
17. த்துப் பத்மநாசாரியன் மறுமன்
18. னி(ா)யர் கோடாரி குறுமன்னியர்
19. கோளரி துலுக்கர் தள விபாட
20. ன் துலுக்கர் மொகரந் தவிழ்த்தா
21. ன் தற்காற்குத் தற்கன் தற்கவினோ
22. தன் தண்டுவார் மிண்டன் சண்டப்பிற
23. சண்டன் சகலகுணாபிராமன் துங்கா
24. பிராமன் துர்க ரேபந்தன் பூறுவ தெ
25. ட்சண பச்சிம உத்தர சத்த சமுத்திராதிபதி
26. அசுபதி கெசபதி நரவேட்டை கண்டரு
27. ளிய மல்லிகாற்சுனதேவ மகாராய
28. ர் பிறபுடதேவ மகாராயர் யானைகு
29. ந்திதேவ மகாராயர் விருப்பாட்சிதே
30. வ மகாராயர் ராமதேவ மகாராயர் சீரெ
31. ங்கதேவ மகாராயர் பிறிதிவிராச்சி
32. யம் பண்ணியருளாநின்ற சாலி

### இரண்டாம் பக்கம்

33. வாகன சகாத்தம் 1684 கலி
34. 4863 யிதன்மேற் செல்லாநின்ற
35. சித்திரபானு வருஷம் மாசிமாதம் 13 சோமவார
36. மும் பூறுவபட்சத்து அஷ்டமியும் ரோகணி நட்
37. செத்திரமும் கூடின சுபதினத்தில் ராசராச
38. வளநாடு ராசேந்திசோழ வளநாடு பன்றிகூ
39. ழ் நாடு அன்புத்தெற்கிலூரிலிருக்குங் கா
40. ணியுடைய அரைய மக்களில் ரெகுந
41. ாத ராய தொண்டைமானார் பவுத்திரன் தி
42. ருமலை ராய தொண்டைமானார் புத்திரன் வி
43. சைய ரெகுநாத ராய தொண்டைமானார்
44. தருமபுரம் சிவஞான சம்மந்த தேசிகர் சீஷரான
45. காசிவாசி குமரகுருபரத் தம்பிரான் அவர்கள் பா
46. ரிசம் காசியில் அன்னதானக் கட்டளைக்குக்
47. கோனாட்டில் வாழைக்குறிச்சி தாராபூறுவமா
48. கத் தாம்பிறசாதனம் குடுத்தபடி வாழைக்குறிச்சிக்
49. கெல்லையாவது கீழ்பாற்கெல்லை பனையூர் வடக்குக் கு
50. ளம் தெற்குக் குளத்துள்வாய்க்கு மே(ா)ற்கு தென்பாற்
51. கெல்லை குழிபிறை வாகைவயலுக்கு வடக்கு மேல்
52. பாற்கெல்லை கொவ்வனூர் புதுவயலுக்குக் கிழக்கு
53. வடபாற்கெல்லை நெல்வேலி விஷ்மூலிகைவயல்க் கொ
54. த்திவயலுக்குத் தெற்கு ஆகச் சூழ்ந்த பெருநான் கெல்
55. லைக்குள்ள நிலத்தில் யீரவயலும் அதைச் சேந்த
56. புஞ்சை 30 ஏர்க் காடும் போக மத்த நஞ்சை புஞ்
57. சை சொற்ணாதாயம் வகையறுப்பு யிடங்கை வ
58. லங்கை பலசுவந்திரம் யிதுமுதலான எப்பேர்
59. ப்பட்ட வரியும் நிதி நிட்சேபம் மேல்நோக்கிய மர
60. ம் கீழ்நோக்கிய கிணறு சறுவமானியமாக தாரா
61. பூறுவமாக தாம்பிரசாதன பட்டையம் குடுத்த
62. படியினாலே சந்திராதித்தருள்ளவரைக்கும் எங்கள்
63. புத்திர பவுத்திர பாரம்பரியமாகத் தங்கள் சீஷ பாரம்ப
64. ரியமாக அனுபவித்துத்கொண்டு தற்மத்தைப் பரிபாலன
65. ம் பண்ணிக்கொண்டு வரக்கடவராகவும் இந்தப்படி சம்ம
66. தித்து காசி அன்னதானக் கட்டளைக்கு விசைய ரெ
67. குனாத ராய தொண்டைமானார் தாம்பிறசாதனம் பண்
68. ணிக் குடுத்தோம்

69. யிந்தத் தற்மத்துக்

70. கு அகிதம் பண்ணினபேர்கள் காசியிலே கெங்கைக்கரை

71. யிலே கோடி காராம்பசுவைக் கொன்ற தோஷத்

72. திலே போவாராகவும் யிந்த சாதனம் பழனிய

73. ப்ப வாத்தியார் எழுத்து உ ஸ்வதத்தாம் பரதத்தா

74. ம் வாயோ உறரேது சி வசுந்தராம் ஷஷ்டி வர்ஷ சகஸ்ர

75. ாதி விஷ்ட்டாயாம் ஜாயதே கிரிமி:

# 3. ஈரவயல் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | புதுக்கோட்டைத் தொண்டைமான் |
| அரசர் | : | விசைய ரகுநாத ராயத் தொண்டைமானார் (1789 – 1807) |
| காலம் | : | 25.7.1790 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 29 செ.மீ.X 22.5. செ.மீ. |

அமைப்பும் செய்தியும்:

இச்செப்பேட்டின் கைப்பிடியின் மையத்தில் உள்ள சிறு துளையின் அருகே இருபுறமும் சந்திர சூரியர்கள் வரையப்பட்டுள்ளனர். செப்பேடு தொடங்கும்முன் முதலில் காளை வாகனத்தில் சிவலிங்க வடிவில் காசி விசுவநாதரும், அடுத்த நடுநாயகமாக உயர்ந்த பீடத்தில் விசாலாட்சியும், மூன்றாவதாக அலங்கரிக்கப் பெற்ற திரிசூலமும் வரையப்பட்டுள்ளன; சிவலிங்கம் முகலிங்கமாக அமைக்கப்பட்டு மலர்மாலை அணிவிக்கப்பட்டுள்ளது. திரிசூலத்தின் இடையிலும் மாலை அணிவிக்கப்பட்டுள்ளது.

பிற்காலச் செப்பேட்டில் பொதுவாகக் காணப்பெறும் மெய்க்கீர்த்திப் பகுதிகளுக்குப் பின்னர் விசயநகர அரசர்கள் சிலர் பெயரும் மதுரை நாயக்க அரசர் அனைவர் பெயர்களும் கூறப்பட்டுள்ளன.

25.7.1790 அன்று விசைய ரகுநாத ராயத் தொண்டைமானார் அவர்கள் காசியில் அன்னதானக் கட்டளைக்காகத் தருமபுரம் சிவஞானசம்மந்த தேசிகர் சீடரான காசிவாசி சிதம்பரனாதத் தம்பிரானவர்கள் வசம் கோனாட்டு ஈரவயலைச் சர்வ மானியமாகக் கொடுத்ததை இச்செப்பேடு கூறுகிறது.

நிலம் அளிக்கப்பெற்ற ஈரவயல் வாழைக்குறிச்சி எல்லைக்கு உட்பட்டது என்றும் அது நன்செய் நிலப்பகுதி என்றும் கூறப்பட்டுள்ளது.

இந்தச் செப்பேட்டுச் செய்தியைக் பழனியப்ப வாத்தியார் மகன் ரகுநாத வாத்தியார் எழுதியுள்ளார். இறுதியில் பிறர் செய்த தானத்தைக் காப்பது பற்றிய இரண்டு வடமொழிச் சுலோகங்கள் எழுதப்பட்டுள்ளன.

இச் செப்பேட்டில் குறிக்கப்பட்டுள்ள ஈரவயலும் அதைச் சேர்ந்த முப்பது ஏர்ப் புன்செய் நிலமும் போக வாழைக்குறிச்சியின் மற்றப் பகுதிகள் ஏற்கனவே 21.2.1763ல்

காசியில் அன்னதான தர்மத்துக்காக விசைய ரகுநாத ராயத் தொண்டைமானார் அவர்களால் கொடையாக அளிக்கப்பட்ட செய்தி காசிமடத்தின் மற்றொரு செப்பேட்டில் கூறப்பட்டுள்ளது (எண் 2)

செப்பேடு

முதல் பக்கம்

ஸ்ரீராமஜெயம்

1. உ ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுபரன் அரியராய தள விபாட
2. ன் பாஷைக்கு தப்புவராய கண்டன் மூவராய கண்டன் கண்டநா
3. டு கொண்டு கொண்டநாடு குடாதான் பரிமேல் நகுலன் கரிமே லுதை
4. யன் வில்லால் விசையன் சொல்லால்த் தருமன் வாளுக்கு வீம
5. ன் அளகுக்கு அனங்கன் அறிவுக்கு அகஸ்தியன் கொடைக்குக் க
6. ர்னன் பூலோக புரந்தரன் புஷ்ப்ப கபேரி பட்ச பாஞ்சால தேசன் சா
7. தகமான உத்தண்ட தொறாத் தண்ட சண்டமாருத மண்டலேசுபரன்
8. அஷ்ட்டதிக்கும் ராச மனோபயங்கரன் துஷ்ட்ட நிக்கிறக சிஷ்ட்ட பரி
9. பாலனன் பிறிதிக்கினையான் பரசுராமன் படைகண்டு தத்தளிப்
10. பார் கண்டன் பாண்டிமண்டல ஸ்தாபனாசாரியன் சோளமண்ட
11. லப் பிறதிஷ்ட்டாபனாசாரியன் தொண்டமண்டலச் சண்டப் பிரச
12. ண்டன் சேரர் சோழ பாண்டிய வல்லாழ பயங்கரன் பூறுவ
13. தெட்சண பட்சிம உத்தர சத்த சமுத்திராதிபதி எம்மண்டலமும்
14. கொண்டு யீழமுந்திறை கொண்டு யாள்ப்பாணமும் அழித்து கெ
15. ச வேட்டை கண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுபரன்
16. ராசமாத்தாண்டன் ராசகண்டீரவ
17. ன் ராசாக்கள் தம்பிரா
18. ன் ராசநரேந்திரன் மன்
19. னரில்மன்னன் மன்னர்கெம்பீரன் சாடிக்காரற் கண்டன் சாமத்
20. துரோகியள் முண்டன் கட்டாரிச் சாளுவன் கலங்காத கண்டன்
21. கும்மட்டி ராமன் சம்மட்டி நாறாயனன் ஒட்டியர் தள விபாடன் ஒட்
22 டியர் மோகந் தவிழ்த்தான் துலுக்கர் தள விபாடன் துலுக்கர் மோ
23. கந் தவிள்த்தான் மறுமன்னியர் சுந்தரன் மன்னிய ராட்டந் தவிழ்
24. த்தான் அசுபதி கெசபதி நரபதி நவகோடி நாறாயனன் ஸ்ரீவீரப்
25. பிறதாபனாகிய அரிஅரதேவ மகாராயர் புசங்க ராயர் மல்லிகாற்
26. சுனதேவ மகாராயர் விருப்பாட்சிதேவ மகாராயர் புறபுடதேவ ம
27. காராயர் நரசிங்கதேவ மகாராயர் நரசருடையதேவ மகாராயர்
28. கிஷ்டிணதேவ மகாராயர் சதாசிவாராயர் ராமராயர் திருமலை
29. தேவ மகாராயர் சீர்ரெங்கராயர் வேங்கிடபதிதேவ மகாராயர் சி
30. க்க ராயர் ஆனைகொந்தி வேங்கிடபதிதேவ மகாராயர் ஸ்ரீரெங்கதே
31. வ மகாராயர் காரியத்துக்குக் கற்த்தரான கச்சி விசுவனாத நாய

32. க்கர் கிஷ்டிணப்ப நாயக்கர் வீரப்பநாயக்கர் குமார கிஷ்டிணப்ப நா
33. யக்கர் கஷ்த்தூரி ரெங்கப்ப நாயக்கர் முத்து கிஷ்டிணப்ப நாயக்
34. கர் முத்துவீரப்ப நாயக்கர் திருமலை நாயக்கர் முத்துவீரப்ப நாயக்
35. கர் சொக்கநாத நாயக்கர் ரெங்க கிஷ்டிண முத்துவீரப்ப நா
36. யக்கர் ஸ்ரீவிசையரெங்க கிஷ்டிண முத்துவீரச் சொக்கனா
37. த நாயக்கரய்யரவர்கள் பிறிதிவி ராச்சியம் பண்ணி அருள

இரண்டாம் பக்கம்

38. ாநின்ற சாலிவாகன சகாற்த்தம் 1712 கலியுக சகா
39. ற்த்தம் 4891 இதின்மேல்ச் செல்லாநின்ற சாதாருண வருசம்
40. ஆடி மாதம் 13 தேதி ஆதித்தவாரமும் பூறுவபட்சமும் சதுற்த்தெசியும்
41. உத்திராட நட்செத்திரமும் விஷ்க்கம்பநாம யோகமும் பாலவா
42. கரணமுங் கூடின சுபதினத்தில் ராசராச வளநாடு ராசேந்திர
43. சோளவளநாடு பன்றிசூள் நாடு அன்ம்பில் தெந்குலூரிலிருக்கு
44. ங் காணியுடைய அரையமக்களில் யிந்திரகுல வங்கிஷன் தெ
45. ன்கோடி ஆதிபன் வடகரைப்புலி வாகைமாலைப் புயனான ஸ்ரீ
46. மது திருமலைத் தொண்டைமானார் பவுத்திரன் திருமலையப்ப ராய
47. தொண்டைமானார் புத்திரன் விசைய ரெகுனாத ராய தொண்டை
48. மானாரவர்கள் காசியில் அன்னதான கட்டளைக்கி தருமபுரஞ் சி
49. வஞான சம்மந்த தேசிகர் சீஷரான காசிவாசி சிதம்பரனா
50. த தம்பிரானவர்கள் பாரிசமாகக் காசித் தற்மத்துக்கு தாம்
51. பிர சாதனப் பட்டையங் குடுத்தபடி கோனாட்டில் யீரவயல்
52. தாராபூறுவமாக சறுவமானியமாக தாம்பூர சாதனப் பட்டை
53. யம் கொடுத்தபடி யீரவயலுக்கு எல்லையானது வாளைக்குறிச்
54. சி பரிநான்கெல்லைக் குள்ப்பட்ட நிலத்தில் யீரவயல் நஞ்சையு
55. ம் அதைச் சேர்ந்த முப்பது ஏர்ப் புஞ்சையும் திட்டுத் திடல் நத்தம்
56. படுகை தோப்புத் தொரவு மாவடை மரவடை சொற்னாதாயம் வகைய
57. றுப்பு யிடங்கை வலங்கை பலசுவந்திரம் யிதுமுதலான யெப்பேர்
58. ப்பட்ட வரியும் கீள்நோக்கிய கிணறு மேல்நோக்கிய விருட்சம் சில த
59. ரு பாஷாணம் நிதி நிட்சேபம் சறுவமானியமாக தாராபூறுவமாகத் தா
60. ம்பிர சாதனப் பட்டையங் குடுத்தபடியினாலே சந்திராதித் தருள்ளவ
61. ரைக்கும் யெங்கள் புத்திர பவுத்திர பாரம்பரையமாப தங்கள் சீஷ பார
62. ம்பரையமாக அனுபவித்துக் கொண்டு தற்மத்தை உத்திரகோத்திரமா
63. க நடத்திவிச்சுக்கொண்டு சுகத்திலேயிருக்கக் கடவராகவும் யிந்தத் தறு
64. மத்துக்கு வாக்குச் சகாயம் சரீர சகாயம் அற்த்த சகாயம் பண்ணின
65. பேர்கள் கெங்கா தீரத்திலே கோடி சிவலிங்கப் பிறதிஷ்டை பண்ணி
66. ன பலனை அடைவார்கள் யிந்நத் தற்மத்துக்கு அகிதம் பண்ணின

67. பேர்கள் கெங்கைக் கரையிலே கோடி காராம்பசுவைக் கொன்ற
68. தோஷத்திலே போவாராகவும் இந்தச் சாதனமெழுதின நன்மை
69. பழனியப்ப வாத்தியார் குமாரன் ரெகுனாத வாத்தியார் நெட்டெழுத்து
70. ஸ்வதத்தாத்வி குணம் புண்யம் பரதத்தாநு பா
71. லநம் பரதத்தாப ஹாறேன ஸ்வதத்தம் நிஷ்பலம்
72. பவேது: ஸ்வதத்தாம் பரதத்தாம் வாயோஹரே
73. து வசுந்தரம் சஷ்டி வர்ஷ சகஸ்ராணி விஷ்டா
74. யாம் ஜாயதே க்ருமி:

# 4. கூடலூர்ச் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | புதுக்கோட்டைத் தொண்டைமான் |
| அரசர் | : | விசைய ரகுநாத ராயத் தொண்டைமானார் (1789 – 1807) |
| காலம் | : | 2.5.1796 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 31 செ.மீ. X 18.5. செ.மீ. |

அமைப்பும் செய்தியும் :

இச் செப்பேட்டில் முக்கால் வட்டவடிவில் அமைக்கப்பெற்ற கைப்பிடியில் சிறுதுளை ஒன்று உள்ளது. கைப்பிடியில் முன்பக்கத்தில் துளையின் மேல்பகுதியில் பிள்ளையார் சுழியும், அதன் இருபுறங்களில் சூரியனும் சந்திரனும் வரைகோட்டு ஒவியமாக வரையப்பட்டுள்ளனர்.

வழக்கமான மெய்க்கீர்த்திப் பகுதிக்குப் பின்னர் விசயநகர அரசர்கள் சிலர் பெயரும், மதுரை நாயக்க அரசர்கள் பெயரும் எழுதப் பெற்றுள்ளன.

**2.5.1796** அன்று திருமலைத் தொண்டைமானார் பேரனும், திருமலையப்ப ராயத் தொண்டைமானார் மகனும் ஆன விசைய ரகுநாத ராயத் தொண்டைமானார் அவர்கள் தருமபுரம் ஆதினம் சிவஞான சம்மந்த தேசிக சுவாமிகள் சீடர் திருப்பனந்தாள் காசிமடத்து அதிபர் சடையப்பத் தம்பிரான் அவர்கள் மூலமாகக் கோனாட்டுப் பகுதியில் உள்ள கூடலூர் என்னும் ஊரைக் காசித் தர்மத்துக்குக் கொடையாக அளித்த விவரம் இச் செப்பேட்டில் கூறப்பட்டுள்ளது.

கூடலூரின் எல்லைகளாக ராராபுரம் தன்மணிக்குளம், சித்தூர் சாணியோடை, தென்னாட்டம்பட்டி, கீரங்குடிப்பட்டி , பனையூர் எல்லை ஆகியவை கூறப்பட்டுள்ளன.

கொடையைக் காப்போர், அழிப்போர் முறையே அடையும் நன்மை தீமைக் குறிப்புக்களுக்குப் பின்னர்த் தானத்தைக் காப்பது தொடர்பான மூன்று வடமொழிச் சுலோகங்கள் கிரந்த எழுத்துக்களில் எழுதப்பட்டுள்ளன.

இந்தச் சாசனம் எழுதியவர் பழனியப்ப வாத்தியார் மகன் ரெகுநாத வாத்தியார் என்று இறுதியில் பொறிக்கப்பெற்றுள்ளது.

### செப்பேடு
### முதல் பக்கம்
### ஸ்ரீ ராமஜெயம்

1. ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுபரன் அரியராயதள விபாட
2. ன் பாஷைக்கு தப்புவராயர் கண்டன் மூவராயர் கண்
3. டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு குடாதான்
4. பரிமேல் நகுலன் கரிமே லுதையன் வில்லால் விசைய
5. ன் சொல்லால் தருமன் வாளுக்கு வீமன் அழகுக் கனங்க
6. ன் அறிவுக் ககத்தியன் குடைக்குக் கற்னன் பூலோக பு
7. ரந்தரன் புட்கபேரி பட்ச பாஞ்சாலதேசன் சாதகமா
8. ன உத்தண்ட தொரத்தண்ட சண்டமாருத மண்டலேசுப
9. ரன் அஷ்டதிக்கும் ராசமனோபயங்கரன் துஷ்ட நிக்கிறக
10. சிஷ்ட்ட பரிபாலனன் பிறிதிக்கினையான் பரசுரா
11. மன் படைகண்டு தத்தளிப்பார் கண்டன் பாண்டிமண்ட
12. ல ஸ்தாபனாசாரியன் சோழமண்டலப் பிறதிஷ்ட்டாபனா
13. சாரியன் தொண்டமண்டல சண்டப்பிறசண்டன்
14. சேரர் சோழ பாண்டிய வல்லாள பயங்கரன் பூறு
15. வ தெட்சண பச்சிம உத்தர சத்த சமுத்திராதிபதி எம்ம
16. ண்டலங் கொண்டு யீழமுந் திறைகொண்டு யாட்ப்
17. பாணமும் அழித்து கெசவேட்டை கண்டருளிய ரா
18. சாதிராசன் ராசபரமேசுபரன் ராசமாற்த்தாண்
19. டன் ராசகண்டீரவன் ராசாக்கள்தம்பிரான் ரா
20. சநரேந்திரன் மன்னரில் மன்னன் மன்னர் கெ
21. ம்பீரன் சாடிக்காறர் கண்டன் சாமத்துரோகி
22. யள் முண்டன் கட்டாரிச் சாளுவன் கலங்காத க
23. ண்டன் கும்மட்டி ராமன் சம்மட்டி நாறாயணன்
24. ஒட்டியர் தள விபாடன் ஒட்டியர் மோகந் தவிழ்
25. த்தான் துலுக்கர் தள விபாடன் துலுக்கர் மோகந்
26. தவிழ்த்தான் மறுமன்னியர் சுந்தரன் மன்னிய
27. ராட்டந் தவிழ்த்தான் அசுபதி கெசபதி தனபதி நர
28. பதி நவகோடி நாராயணன் ஸ்ரீவீரப் பிராதாபனா
29. கிய அரிஅரதேவ மகாராயர் புசங்கராயர் மல்லி
30. கார்ச்சுனதேவ மகாராயர் விருப்பாட்சிதேவ மக
31. ாராயர் பிறபுடதேவ மகாராயர் நரசிங்கதே
32. வ மகாராயர் நரசாருடையதேவ மகாராயர்
33. கிஷ்ணதேவ மகாராயர் திருமலைதேவ மகாரா
34. யர் வேங்கிடபதிதேவ மகாராயர் சிக்கதேவ ம
35. காராயர் ஆனைகொந்திதேவ மகாராயர் ஸ்ரீரெ

36. ங்கதேவ மகாராயர் காரியத்துக்குக் கற்த்தரான க
37. ச்சி விசுவனாத னாயக்கர் கிஷ்ணப்ப னாயக்கர் வீரப்
38. ப னாயக்கர் கஸ்தூரி ரெங்கப்ப னாயக்கர் முத்துகிஷ்ண
39. ப்ப னாயக்கர் முத்துவீரப்ப னாயக்கர் திருமலை னாயக்க
40. ர் முத்துவீரப்ப னாயக்கர் சொக்கனாத னாயக்கர் ரெங்ககி
41. ஷ்ண முத்துவீரப்ப னாயக்கர் ஸ்ரீவிசையரெங்க கிஷ்
42. ண முத்துவீர சொக்கநாத னாயக்கரைய்யர் அவர்க
43. ள் பிறிதிவி ராச்சியம் பண்ணி அருளாநின்ற சாலிவ
44. ாகன சகார்த்தம் 1718 கலியுக சகார்த்தம் 4
45. 897 யிதன்மேல் செலாநின்ற நள வருஷம் சித்திரை
46. மாதம் 23 தேதி. திங்கள்கிழமையும் அமரபட்சமும் திச
47. மியும் சதைய நட்செத்திரமும் அயிந்திரநாம யோ

இரண்டாம் பக்கம்

48. கமும் வணிக வாகறணமுங் கூடின சுவதினத்தில்
49. ராசராச வளநாடு ராசேந்திரசோழ வளநாடு பன்
50. றிசூழ்னாடு அன்பில் தெற்குலூரிலிருக்குங் காணியு
51. டைய அரசர் மக்களில் யிந்திரகுல வங்கிஷன் அன்பி
52. ல் னாடன் தென்கோடியர் தீபன் வடகரைப்புலி வாை
53. க மாலை புயனான ஸ்ரீமது திருமலைத் தொண்டைமா
54. னார் பௌத்திரன் திருமலையப்ப ராய தொண்டைமா
55. னார் புத்திரன் விசைய ெ ரகுனாத ராய தொண்டைமா
56. னார் அவர்கள் காசியில் அன்னதானக் கட்டளைக்கி
57. தருமபுரம் சிவஞான சம்மந்தர் தேசிகர் சீஷரான காசி
58. வாசி சடையப்ப தம்பிரான் அவர்கள் பாரிசமாக கா
59. சித் தற்ம்மத்துக்கு தாம்புர சாதன பட்டையங் கொடு
60. த்தபடி கோனாட்டில் கூடலூர் தாராபூறுவமாக சறு
61. வ மானியமாகத் தாம்புர சாதன பட்டையங் கொடு
62. த்தபடி கூடலூருக் கெல்லையாவது கீள்பாற்கெல்
63. லை ராராபுரந் தன்மணிக் குளத்துக்கு மேற்கு வடபா
64. ற் கெல்லையாவது சித்தூர் சாணியோடைக்கு தெற்கு
65. மேல்பாற் கெல்லையாவது தென்னாட்டாம்பட்டி கீரங்
66. குடிப்பட்டிக்குக் கிளக்கு தென்பாற் கெல்லையாவது
67. பனையூர் எல்லைக்கு வடக்கு யிந்தப் பரினான் கெல்லை
68. க்குள்ப்பட்ட நஞ்சை புஞ்சை திட்டுத் திடல் நத்தம் படுை
69. க தோப்புத் துறவு மாவடை மரவடை சொற்னாதாய
70. ம் வகையறுப்பு யிடங்கை வலங்கை பலசுவந்திரம் யி

71. து முதலான எப்பேர்ப்பட்ட வரியும் யிதில் தேவதாயம்
72. பிற்மதாயம் உம்பளம் தவிட்டுப் பண்டாரம் கவிராயர்
73. நீங்கலாக யிதுக்குப் பிறாக்கு அத்தபடி யிறைவரி சுவந்திர முள்
74. ளதும் கீழ்னோக்கிய கிணறு மேல்நோக்கிய விருட்சம் செல
75. தரு பாஷாணம் நிதி நிட்சேபம் சறுவமானியமாக தாம்பு
76. ர சாதனப் பட்டையங் கொடுத்தபடியினாலே சந்திராதி
77. த்தாள் உள்ளவரைக்கும் எங்கள் புத்திர பவுத்திர பார
78. ம்பரையமாக தங்கள் சீஷ பாரம்பரையமாக அனுபவி
79. த்துக்கொண்டு தற்மத்தை உத்திர கோத்திரமாக நடத்தி
80. விச்சுக் கொண்டு சுகத்திலே யிருக்கக் கடவாராகவும்
81. யிந்த தற்மத்துக்கு வாக்குச் சகாயம் சரீர சகாயம் அ
82. ற்த்த சகாயம் பண்ணின பேர்கள் காசியிலே கெ
83. ங்கா தீரத்திலே கோடி சிவலிங்கப் பிறதிஷ்ட்டை
84. பண்ணின பலனை அடைவார்கள் யிந்த தற்ம
85. த்துக்கு அகிதம் பண்ணினவர்கள் காசியிலே கெங்ை
86. கக் கரையிலே கோடி காராம்பசுவைக் கொன்ற தே
87. ாஷத்திலே போவாராகவும் தாந பாலந யோர்மத்ே
88. ய தாநா ஸ்ரயோநு பாலநம் தாநாத் ஸ்வர்க்க மவாப்
89. நோதி பாலநாதச் சுதம்பதம்: ஏகைவ பகிநீ லோே
90. க சர்வேசா மேவ பூபுஜாம் ந கரக் ரா
91. ஹ்யா விப்ர தத்தா வசுந்தராம்: ஸ்வதத்தாத்வி குணம் பு
92. ண்யம் பரதத்தாநு பாலநம் பரதத்தாப ஹாரேண
93. ஸ்வதத்தம் நிஷ்பலம் பவேத்: யிந்த சாதனம் எழுதின
94. நன்மை பழணியப்ப வாத்தியார் புத்திரன் ரெகு
95. னாத வாத்தியார்

# 5. கூத்தனூர்ச் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | புதுக்கோட்டைத் தொண்டைமான் |
| அரசர் | : | விசைய ரகுனாத ராய பாதர் தொண்டைமானார் (1789–1807) |
| காலம் | : | 1.12.1800 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 36.5 செ.மீ. X 21.5. செ.மீ. |

அமைப்பும் செய்தியும் :

இச் செப்பேட்டில் துளையுடன் கூடிய கைப்பிடியில் செப்பேட்டின் கொடைக்கேற்பக் காசி விசுவநாதரும், விசாலாட்சியும் முன்பக்கம் அழகாக வரையப்பட்டுள்ளனர். விசுவநாதர் முகலிங்கம் போன்ற அமைப்பில் மாலையுடன் அலங்கார வடிவில் காட்சியளிக்கிறார். இடப்புறம் நான்கு திருக்கரங்களுடன் நின்ற நிலையில் விசாலாட்சி அம்மை காட்சியளிக்கின்றார்.

கைப்பிடியின் பின்புறத்தில் காசித் தலத்தின் சிறப்புக் காவல் தெய்வம் கால பைரவர் தம் வாகனமான நாயுடன் இரண்டு திருக்கரங்களோடு நின்ற நிலையில் வரைகோட்டு உருவில் உள்ளார். வலக்கையில் செண்டு ஒன்றை ஏந்தியுள்ளார். பைரவருக்கு முன் தண்டு ஒன்று காட்சியளிக்கிறது.

ராசா விசைய ரெகுநாத பாதர் தொண்டைமானார் அவர்கள் (1789–1807) 1.12.1800 அன்று தம் ஆட்சியில் கானாட்டுப் பகுதிக்குச் சுபேதாராக விளங்கிய செங்கமலம்பிள்ளை மகன் அடப்பங் கூத்தப்பன் பெயரில் சைவர்களுக்கு முத்திநகராகத் திகழும் தலம் காசியில் செய்த சில கொடைகளை இச்செப்பேடு விளக்குகிறது.

(1) காசியில் கங்காதீரக் கரையில் சோமேசுரக் கட்டத்தில் தர்மசாலை சத்திரம் ருபாய் 1250 செலவில் கட்டப்பட்டது.

(2) காசி விசுவநாதர் விசாலாட்சியம்மன் அபிஷேகம், நைவேதனம், வில்வார்ச்சனை, திருவிளக்குக் கட்டளைகள் நாள்தோறும் 1 1/4 பணம் செலவில் நடத்தப்பட்டது.

(3) நாள்தோறும் ஆறுபேருக்கு அன்னதான தர்மம் நடைபெற்றுவர மூலப்பொருளாக ருபாய் 625 அளிக்கப்பட்டது.

(4) சோமேசுரக் கட்டத்தில் கட்டப்பட்ட சத்திரத்துக்கு கொவ்வனூருக்கு உள்க்கடையான கூத்தனூரில் பரந்தலைவயல், புதுவயல் நன்செய் புன்செய் விடப்பட்டது.

இவையனைத்தும் தருமபுரம் திருஞானசம்மந்த தேசிகர் சீடரான காசிவாசி சடையப்பத் தம்பிரான் அவர்கள்வசம் அளிக்கப்பட்டது.

கொடையாக அளிக்கப்பெற்ற நிலங்களுக்கு எல்லையாக வாழைக்குறிச்சி புலவன் புன்செய், வாமன முத்திரைக்கல், புனங்கி புன்செய், அனாதிகளர், பொன்னமராபதிப் பாதை, பூவாலைக்குடி பள்ளன்ஊறணி, மாணிக்க நாச்சியார் ஊறணி ஆகியன கூறப்படுகின்றன.

செப்பேடு

முதல் பக்கம்

ஸ்ரீராமஜெயம்

1. ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுபரன் அரியராய த
2. ள விபாடன் பாஷைக்கு தப்புவர்ராயர் கண்டன்
3. மூவராயர் கண்டன் கண்டர் கண்டன் கண்ணெ
4. டயப் பிறதாபன் கட்டாரிச் சாளுவன் கண்டநா
5. டு கொண்டு கொண்டநாடு கொடாதான் ஒருபரி செ
6. காண்டு திரள்பரிவெட்டு மூபைய குலோத்துங்கன்
7. எம்மண்டலங் கொண்டு யீழமுந் திறைகொண்ட ரா
8. சாதிராசன் ராசபரமேசுபரன் ராசகெம்பீரன் ரா
9. சநாறண குலதிலகன் ராசகண்டிரவன் ராசாக்க
10. ள் தம்பிரான் கோட்டத்து மன்னியர் கண்டன் சொரி
11. மன்னியர் சூரியன் கெடி மன்னியர் காலாந்தகன்
12. தொண்டமண்டல ஸ்தாபனாசாரியன் சோழமண்
13. டலப் பிறதிஷ்ட்டாபனாசாரியன் பாண்டிமண்ட
14. லத்து பத்மனாசாரியன் மறுமன்னியர் கோடாரி கு
15. றுமன்னியர் கோளரி துலுக்கர் தள விபாடன் துலு
16. க்கர் மோகந் தவிழ்த்தான் அரிய தள விபாடன் அரிய
17. ர் மோகந் தவிழ்த்தான் தொட்டியர் தள விபாடன் தெ
18. ாட்டியர் மோகந் தவிழ்த்தான் தற்க்காற்கு தற்க்கன் தற
19. க்க வினோதன் தண்டுவார் மிண்டன் சண் (ட) ப்பிறசண்ட
20. ன் ஸகல குணாபிராமன் துங்காபிராமன் துர் (க) ரேப
21. ந்தன் சொல்லுக் கரிச்சந்திரன் வில்லுக்கு விசையன்
22. பரிக்கு நகுலன் குடைக்குக் கற்ன்னன் பொறுமைக்
23. கு தற்ம்மர் பூறுவ தெட்சண பச்சிம உத்தர ஸத்த ஸமுத்திரா

24. திபதி அசுபதி கெசபதி தனபதி நரபதி நரவேட்டை கண்
25. டருளிய மல்லிகாற்சுனதேவ மகாராயர் பிறுடதே
26. வ மகாராயர் ஆனைகுந்திதேவ மகாராயர் ராமதே
27. வ மகாராயர் கிஷ்ட்டிணதேவ மகாராயர் விருப்பா
28. ட்சிதேவ மகாராயர் ஸ்ரீரெங்கதேவ மகாராயர் பிற
29. திவி ராச்
30. சியம் ப
31. ண்ணிய
32. ருளாநின்ற சாலிவாகன சகாற்த்தம் 1722
33. கலியுக சகாற்த்தம் 490₁ இதன்மேல் செலாநின்
34. ற ரவுத்திர வருஷம் காற்த்திகை மாதம் 19 தேதி திங்கள்க் கிழ
35. மையும் பௌநமாவாஸ்யயும் ரோகணி நட்செத்தி
36. ரமும் சித்தினாம யோகமும் பவகறணமும் யிதுக
37. ள் கூடின புண்ய காலத்திலே ராசராச வளநாடு ர
38. ாசேந்திரசோழ வளநாடு பன்றிசூழ் நாடு அன்பில்
39. தெற்குலூரிலிருக்குங் காணியுடைய அரசர்மக்க
40. ளில் காசிப கோத்ரத்தில் விளங்கும் ஸ்ரீமது திருமலை
41. ராய தொண்டைமானார் பௌத்ரன் திருமலையப்ப ரா
42. ய தொண்டைமானார் புத்ரன் ராசஸ்ரீ ராசா விசை
43. ய ரெகுநாத ராய பாதர் தொண்டைமானார் அவர்களு
44. க்கு மன்சுபா நடத்த கானாட்டில் செங்கமலம் பிள்ளை

இரண்டாம் பக்கம்

45. மகன் அடப்பங் கூத்தப்பன் பேருக்கு காசியில் கெங்கா
46. தீரக் கரையில் சோமேசுர கட்டத்தில் தற்ம்ம சாலை ச
47. த்திரங் கட்ட ருபாய் 1250 குடுத்து கட்டிவைச்சு
48. காசியில விசுவேசுரர் விசாலாட்சியம்மன் அபிே
49. ஷகம் நைவேதனம் வில்வாற்ச்சனை திருவிளக்கு
50. நித்தப்படி ஒண்ணேகால்ப் பணம் நடந்துவரவும் அ
51. ன்னதான தற்ம்மத்துக்கு நித்தப்படி ஆறுபேருக்கு
52. நடந்து வரவு முதல் ருபாய் 625 கொடுத்து ச
53. த்திரக் கிறாமங் கொவ்வனூருக்கு உள்க்கடையா
54. ன கூத்தனூரில் பரந்தலைவயல் புதுவயல் நஞ்சை
55. புஞ்சையும் விட்டு தருமபுரந் திருஞானசம்மந்த ே
56. தசிகர் சீஷரான காசிவாசி சடையப்ப தம்பிரானவ
57. ர்கள் பாரிசமாக தாராபூறுவமாக தாம்பிர ஸாத
58. னப் பட்டையங் கொடுத்தபடி கூத்தனூர் பரந்தலை
59. வயல் புதுவயலுக் கெல்லையாவது கீழ்பாற்கெ

60. ல்லை வாழைக்குறிச்சி புலவன் புஞ்சை மேலக் கரு
61. வில் வாமன முத்திரைக்கல்லுக்கு மேற்கு தென்பாற்
62. கெல்லை முனங்கி புஞ்சை அனாதிகளர் பொன்ன(ம) ராப
63. தி பாதைக்கு வடக்கு மேல்பாற்கெல்லை பூவாலைக்
64. குடி பள்ளன் ஊறணி சனிமூலை வாமனமுத்திை
65. ர கல்லுக்குக் கிழக்கு வடபாற்கெல்லை மாணிக்க னாச்
66. சியார் ஊறணி பாதியில் படுபாறையில் வாமனமுத்தி
67. ரை உருவுக்கு தெற்க்கு ஆகப் பரினான் கெல்லைக் குள்பட்
68. ட நஞ்சை புஞ்சை திட்டுத் திடல் நத்தம் படுகை தோப்புத் து
69. றவு மாவடை மரவடை நிதி நிட்சேபங் கீழ்னோக்கிய
70. கிணறு மேல்னோக்கிய விருட்சஞ் செல தரு பாஷா
71. ணம் சொற்ன்னாதாயம் வகையறுப்பு பலசுவந்திரம்
72. வலங்கை இடங்கை எப்பேர்ப்பட்ட வரியும் தாரா பூ
73. றுவமாக தாம்புர ஸாஸனப்பட்டையங் கொடுத்தப
74. டியினாலே சந்திராதித்தாளுள்ளவரைக்கு எங்கள் பு
75. த்ர பௌத்ர பாரம்பரையமாக தங்கள் ஸ்ரீஷ பாரம்பை
76. ரம்பரையமாக தற்ம்மத்தை உத்திரகோத்ரமாக ஆச
77. சந்திரார்க்கஸ்தாயியாக பரிபாலனம் பண்ணிக்கொண்
78. டு வருவார்களாகவும் இந்தத் தற்ம்மத்துக்கு வாக்கு ஸ
79. காயம் சரீர ஸகாயம் அற்த்த ஸகாயம் பண்ணின
80. பேர்கள் காசியிலே கெங்கா தீரத்தில் கோடி சிவலிங்
81. கப் பிறதிஷ்ட்டை பண்ணின பலனையடைவார்களாக
82. வும் யிந்த தற்ம்மத்துக்கு யாதாமொருத்தர் அகிதம் பண்ணினபே
83. ர்கள் காசியிலே கெங்கா தீரக்கரையில் கோடி காராம் பசு
84. வைக் கொன்ற தோஷத்திலே போவாராகவும் ஸ்வதத்த ாத்வி
85. குணம் புண்யம் பரதத்தாநு பாலநம் பரதத்தாப ஹாரே
86. ன ஸ்வதத்தம் நிஷ்பலம் பவேத்: தானபாலன யோர்மத்யே தானா
87. ஸ்ரயோநு பாலநம் தானாத் ஸ்வர்க்கம வாப்நோதி பாலநாத
88. ச்சுதம் பதம்: யிந்த தாம்புர ஸாதனம் பழனியப்ப வாத்தி
89. யார் குமாரன் ரெகுனாத வாத்தியார் கையி எழுத்து உ

# 6. கீழ்ப்பாப்பனூர்ச் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | அறந்தாங்கித் தொண்டைமான் |
| அரசர் | : | அருணாசல வணங்காமுடித் தொண்டைமானார் |
| காலம் | : | 16.9.1728 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 26 செ.மீ. X 20 செ. மீ. |

அமைப்பும் செய்தியும்:

இச்செப்பேடு அரைவட்ட வடிவில் அமைந்த சிறு கைப்பிடியும், மையத்தில் துளையும் உடையது. கைப்பிடியிலும், செப்பேட்டின் மேல்பகுதியிலும் (இலிங்க வடிவில்) காசி விசுவநாதரும் விசாலாட்சி அம்மனும் வரைகோட்டு ஓவியத்தில் இரட்டைக்கோடுகளின் உள் சிறு அளவில் வரையப்பட்டுள்ளனர். விசாலாட்சி அம்மன் இருகரங்களுடன் வலக்கரத்தில் மலரேந்தி உள்ளார். ஆண்டு என்று குறிப்பதற்குக் கொல்லம் என்ற சொல் பயன் படுத்தப்பட்டுள்ளது.

பிற்காலச் செப்பேடுகளில் பொதுவாகக் காணப்பெறும் அரசர்களைப் பற்றிய புகழ்மொழிகளுடன், தொண்டைமான் மரபினருக்குரிய பட்டப் பெயர்கள் பல குறிக்கப்பட்டுள்ளன. அவற்றில் சில வேறுபாடுகள் காணப்பெறுகின்றன.

காசிவாசி தில்லைநாயகத் தம்பிரான் அவர்கள் (அருளாட்சிக் காலம் கி.பி. 1720 – 1756) திருப்பனந்தாள் காசிமடத்துத் தலைவராக இருந்தபோது அவர்கள்வசம் காசியிலேயுள்ள காசிமடத்தில் அன்னதானம் செய்வதற்காக வெள்ளாம்பற்றில் மிழலைநாட்டில் வெள்ளூர் மாகாணத்தில் உள்ள கீழ்ப்பாப்பனூர் என்ற ஊரை அறந்தாங்கி அரசு அருணாசல வணங்காமுடித் தொண்டைமான் அவர்கள் 16.9.1728 அன்று சர்வ மானியமாக அளித்ததை இச்செப்பேடு கூறுகிறது.

இவ்வூர் வருவாய் தானிய விளைச்சல் சொர்ணாதாயம் முதலியன கொண்டு காசியில் உள்ள காசிமடத்தில் பிராமண போசனம், மயேசுரபூரை, நந்தவனம் ஆகியவற்றுக்காகச் செலவிடப்பட்டது.

காசி மடத்தார் சீஷ பாரம்பரியமாய் இவ்வூரை அனுபவித்துவர வேண்டுமெனக் கூறப்பட்டுள்ளது. திருப்பனந்தாள் காசிமடத்து அதிபர் காசிவாசி தில்லைநாயக சுவாமிகள் தருமபுரம் திருஞானசம்மந்த பண்டாரம் அவர்களின் சீஷர் என்று கூறப்பட்டுள்ளது.

செப்பேடு

முதல் பக்கம்

ஸத்யம்

1. உ ஸ்வஸ்திஸ்ரீ சாலிவாஹன சகாஸ்தம் 1651 யிதன் மேல்ச் செல்லாநி
2. ன்ற கொல்லம் கீலக வருஷம் புரட்டாசி மாதம் 16 தேதி சுக்கிரவாரமும் அஷ்ட்டமியும் மூலா நஷ்செ
3. த்திரம் சுபயோக சுபகரணமும் கூடின சுபதினத்தில் சுவஸ்திஸ்ரீமன்
4. மகாமண்டலேசுரன் அரியராயிர தள விபாடன் பாஷைக்கு த
5. ப்புவராய கண்டன் மூவராய கண்டன் கண்டநாடு கொண்டு கொண்ட
6. நாடு கொடாதான் பாண்டிமண்டல ஸ்தாபநாசாரியன் சோழமண்
7. டலாதிஷ்ட்டாபநாசாரியன் ஈழமுங் கம்பளமும் யாட்பாணராயன் பட்டண
8. மும் எம்மண்டலங்கொண்டு கெசவேட்டை யாடிஅருளிய ராசாதிராசன்
9. ராசபரமேசுரன் ராசமாத்தாண்டன் ராசகெம்பீரன் ஒட்டியர் தள விபாடன் ஒ
10. ட்டியர் மோகந் தவிள்த்தான் துலுக்கர் தள விபாடன் துலுக்கர் மோகந் தவிள்த்தான்
11. அசுவபதி கெசபதி நரபதி தனபதி ஸ்ரீ பூபதிராயர் ஸ்ரீபுசபெலராயர் ஸ்ரீ ராமராயர்
12. ஸ்ரீ கிஷ்ணராயர் யிப்படிப் பிறிதிவிராச்சியம் பண்ணி அருளாநின்ற
13. தொண்டமண்டல பரிபாலநாகிய மல்லை மயிலை கச்சி ஆறையம்பதி
14. யான் பாலார் உடையோன் பாக்கியசம்பன்னன் வம்மலையுடையோன் சங்
15. கு சக்கரம் தரித்தோன் கெருடக்கொடி அநுமக்கொடி புலிக்கொடி சிங்கக்
16. கொடியுடையோன் அத்தியும் புத்தும் அசையினும் அசையான் அலையில் அஞ்
17. சாதவன் ஆதொண்டை மாலை புனைவோர் கலிங்கத் திறை கொண்டா கருணாகர
18. ன் சேமனை வென்ற செயதுங்கன் ஆட்டுக்கானை அளித்தவன் புத்தியில் யூகி பொரு
19. மையில்த் தருமன் கொடைக்கு கர்ன்னன் குதிரைக்கு நகுலன் அவ்வை
20. பாடல் அன்புடன் பெத்தோன் ஆள்வார் பாடலில் அநுதினம் வந்தோன்
21. சூரிய குலத்தில் தோன்றிய வள்ளல் ஸ்ரீமது அருணாசல வணங்காமுடி
22. தொண்டமானாரவர்கள் தருமபுரம் திருஞான சம்மந்த பண்டாரமவர்
23. கள் சீஷரான காசிவாசி தில்லைநாயக தம்பிறான் பாரிசமாக

இரண்டாம் பக்கம்

24. காசியிலே நம்முடைய மடத்திலே அன்னதானம் பண்ணி
25. வரச்சொல்லி தாம்பிற சாதன பட்டையம் கட்டளையிட்டது கிராமமா
26. வது வெள்ளாம்பத்தில் மிழலை நாட்டில் வெள்ளூர் மாகாணத்தில் சேர்ந்
27. த கீள் பாப்பனூர் ஊரது புரவு நஞ்சை புஞ்சை திட்டு திடல் மாவட மறவ
28. ட உள்பட நாங்கெல்லையும் சறுவமானியமாக கட்டளையிட்டபடியினாலே
29. காசியில் நம்முட மடத்திலே பிராமண போசனம் மயேசுரபூசை னந்தவ
30. ானமும் சகலமும் தாஷ்சி வாறாமல் தர்மம் பரிபாலனம் பண்ணிக் கொண்டு

31. சுகத்திலேயிருக்கவும் யிந்த கிறாமத்தில் பெடி சொன்னாதாயம் உள்பட சறுவம
32. ானியமாக கட்டளையிட்டபடியினாலே சந்திராதித்தர் வரைக்கும் கல்லுங்க
33. ாவேரியும் புல்லும் பூமியும் உள்ளவரைக்கும் ஆண்டு அனுபவித்துக் கொண்
34. டு தர்மம் பரிபாலனம் பண்ணிக்கொண்டு சீஷ பாரம்பரையாய்
35. வரக் கடவோமாகவும் உ யிந்த தற்மத்துக்கு·யாதாமொருத்தர் யிதவு பண்ணி பரி
36. பாலனம் பண்ணினவர்கள் கோடி சிவலிங்கப் பிறதிஷ்டை கோடி பிற்ம
37. பிறதிட்டை பண்ணின பலத்தை அடைவராகவும் யிந்த தன்மத்துக்கு யா
38. தொருத்தர் அகிதம் பண்ணின பேர் காசியிலேயும் சேதுவிலேயும் காறாம்
39. பசுவையும் பிறாமணரையும் வதைபண்ணின தோஷத்திலே போவாராக
40. வும் உ
41. ஸ்வதத்தாத்வி குணம் புண்யம் பரதத்தாநு பாலநம் பரதத்தாப ஹாரேண
42. ஸ்வதத்தம் நிஷ்பலம் பவேது: ஸ்வதத்தாம் பரதத்தாம் வயோகரேத் வசுந்
43. தரா ஷஷ்டி வர்ஷ சகஸ்ராணி விஷ்டாயா ஜாயதே கிரிமி:
44. யிந்தப்படிக்கு தாம்பிற சாதனம் பட்டையம் கட்டளையிட்டோம் ஸ்ரீமது அருணா
45. ச்சல தொண்டமானாரவர்கள் காசிவாசி தில்லை நாயக தம்பிரானுக்கு
46. சுபமஸ்து.

# 7. பறங்கிப்பேட்டைச் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | பறங்கிப்பேட்டை மக்கள் |
| அளித்தோர் | : | பறங்கிபேட்டை வணிகர்கள் முதலியோர் |
| காலம் | : | 31.12.1747 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 37 செ.மீ. X 25 செ.மீ. |

அமைப்பும் செய்தியும் :

உயர்ந்து நீண்டுள்ள அழகிய கைப்பிடியின் அடிப்பகுதியில் நடராசப் பெருமான் உருவமும், அருகில் அன்னை சிவகாமியின் உருவமும் வரைகோட்டு ஓவியத்தில் தனித்தனிப் பிரபையினுள் வரையப்பட்டுள்ளது. ஒருபுறம் புலிக்கால் முனிவராகிய வியாக்கிரபாதரும், மறுபுறம் அடியில் பாம்புருவம் கொண்ட பதஞ்சலிமுனிவரும் நடராசப் பெருமானையும், சிவகாமி அம்மையையும் வணங்கிய நிலையில் சிறிய அளவில் உள்ளனர்.

திருவாரூர்க் கோயிலில் உள்ள தில்லைச் செப்பேடு ஒன்றில் வியாக்கிரபாதர், பதஞ்சலி முனிவருடன் இரணியவர்ம மகாராசாவும் ஒன்றாக வரையப் பெற்றுள்ளனர். வியாக்கிரபாதரும், பதஞ்சலி முனிவரும் நடராசப் பெருமானை வணங்கிப் பேறு பெற்றவர்கள். இரணியவர்ம மகாராசா தில்லைப் திருப்பணி செய்தும், வணங்கியும் பேறு பெற்றவர். இச் செப்பேட்டின் தொடக்கத்தில் இரணியவர்ம மகாராசா பெயர் குறிக்கப்பட்டுள்ளது.

சண்முகத் தம்பிரான் சிதம்பரத்தில் ஆயிரக்கால் மண்டபம், நாலுகோபுரம், பஞ்சாட்சரமதிள் ஆகியவைகளைத் திருப்பணி செய்யும்போது பறங்கிப்பேட்டையைச் சேர்ந்த ஊரவர், வர்த்தகர், புடவைக்காரர், நீலக்காரர், மளிகைக்காரர், மற்றும் உள்பட்டார் அனைவரும் அளித்த கொடையை இச்செப்பேடு விளக்குகிறது.

பறங்கிப்பேட்டையில் அன்று விற்கப்பட்ட பல்வேறு பொருள்கள் மிக விரிவாகக் கூறப்பட்டு, அவற்றுக்கு மகமை நிர்ணயம் செய்த விபரமும் விரிவாகக் கூறப்பட்டுள்ளது. பல்வேறு வணிகர்கள் கையொப்பமிட்டுள்ளனர்.

பறங்கிப்பேட்டை நாணயச்சாலை பெத்துப்பத்தர் மகன் குமாரசாமி இப்பட்டயத்தை எழுதியுள்ளார்.

## செப்பேடு

1. ஸ்வஸ்திஸ்ரீ சால்லியவாகன சகாற்தம் 1669 இதின் மேல் செல்லாநின்
2. ற பிறபவ வருசம் தையி மாசம் முதல் தேதி சிவராசதானியாகிய பூலோக கயிலாசமாகிய
3. சிதம்பர ஸ்தலத்தில் அகிலாண்ட கோடி பிறமாண்ட னாயகராகிய சபாபதிக்கு
4. இரண்னியவற்ம மகாராசா னாளையிலே செயித திருப்பணியள் சா
5. சுவதமா யிருக்கத் தக்கதாக ஆயிரக்கால் மண்டபம் னாலு கோபு
6. ரம் பஞ்சாஷ்சரமதிள் இது முதலாகிய திருப்பணிகளெல்லாம்
7. சீறண உத்தாறணமாக பழுது பாற்குற நிமத்தியம் செய்யத்துடங்
8. கிய திருப்பணி வேலை என்னாளும் நடக்கத்தக்கதாக யிந்த மகத்த
9. ாகிய தற்மத்துக்கு பறங்கிப்பேட்டை ஊரவர் வற்தகர் பிடை
10. வக்காறர் நீலக்காறர் மளிகைக்காறர் மத்தும் உள்ப்பட்டாரும் யிந்த
11. திருப்பணி கயிங்கிரியத்துக்கு மனோவாக்காய் கறண திருகறண சு
12. த்தியாய் சண்முகத் தம்புரானவர்கள் முன்னிலையாக மகமை நி
13. ன்னையம் பண்ணி எழுதிக்குடுத்த தான சாதன விபரம் வற்தகர் ஏத்துமதி
14. பிடவை கட்டு ஒன்றுக்கு விராகன் வீசம் காரிக்கன் பிடவை தெத்துக்கு உள்பட்டு வ
15. ருகுற பிடவை சகல தினுசுகளுக்கெல்லாம் கட்டு ஒன்றுக்கு பணம் அரைக்கால்
16. நீலமருந்து பாரம் 1க்கு விராகன் வீசம் நூல் பாரம் 1க்கு விராகன் வீசம் உளி சிப்பம் 1க்கு பணம் கால் மேற்கு
17 வரவு பலசரக்கு ஆரு கொண்டுவந்தாலும் சாவடியில் தீருவை பட்ட (த்)துக்கு
18. பாரம் 1க்கு பணம் அரை பலசரக்குக்கடை வருசம் 1க்கு பணம் 6 பாக்கு வெத்திலைக் கடை வருசம் 1க்கு பணம் 6
19. வாணியர் வருசம் 1க்கு எண்ணை படி 6 நீலக்காறர் பிடைவை தீருகுறத்துக்
20. கு சோடி 1க்கு பணம் அரைக்கால் ஏத்துமதி பிடவை சிப்பம் 1க்கு பணம் அரைக்கால் மத்த பல தினிசுகளுக்கெ
21. ல்லாம் வாங்குற விபரம் முளகு மெழுகு சாம்பிறணி வெள்ளீயம் சந்தனக்கட்டை
22. பறங்கிபட்டை கண்டுத்திப்பிலி வெண்காரம் சுக்குகட்டி ஆரி
23. தாரம் நவட்சாரம் கொடிமுந்திரிப்பழம் தீங்குமந்திழட்
24. டி யிதுகளுக்கு பாரம் விராகன் வீசம் அபின் மருந்து பட்டு னூல் பெருங்காயம் ரசம்
25. சாதிலிங்கம் சாதிக்காய் கிறாம்பு ஆனைகொம்பு ஏலம் கற்ப்பூரம் யிதுகளுக்கு
26. துலை 1க்கு பணம் கால் பச்சைக் கற்ப்பூரம் கட்டி 1க்கு பணம் விராகன் செம்பு பாரம் 1க்கு கம்பி 1 சீனிச்சக்கரை
27. கெந்தகம் களிபாக்கு கற்கண்டு வற்த்தங்கிக்கட்டை சாயவேர் பேரீச்ச
28. ம்பழம் பாரம் 1க்கு பணம் அரை புகயிலை புளி மஞ்சல் முளகுக்காய் ஓமம் சவுக்காரம் வெந்தை
29. யம் கடுகு சணனூல் சீய்யக்காய் அரத்தை பொட்டினிவிப்பு படிக்காரம் கரி
30. யகுவளம் மாசாக்காய் கருஞ்சீரகம் நீரடிமுத்து ஆளிவிரை சல்லேரி
31. க்கட்டை கொப்புச்சந்தனம் முடிகயறு கொளப்புகயறு யிலுப்பைக்க
32. ட்டி யிதுகளுக்கு பாரம் 1க்கு பணம் கால் மேற்கு வரவு நீலப்பொதி 1க்கு சாவடியில்த் தீ
33. ருகிய வெல்லமுட்டை 1க்கு காசு 1 பாக்கு அவணம் 1க்கு பாக்கு 4 முட்டி வெல்லம்

34. தேங்காய் ஓலைப்பிடி யிதுகளுக்கு ஆயிரத்துக்கு 1 ஆசினிப்பலகை மாம்பலகை
35. பூறார் பலகை யிதுகளுக்கு 100 க்கு விராகன் அரை வடக்கு வரவு நெல்லு கரிசு 1க்கு விராகன் வீசம்
36. அரிசி காய் தானியம் கரிசு 1க்கு விராகன் அரைக்கால் யிந்தபடி கூடின மகமை குடுத்து வருகுறது கு
37. டாமல்போனால் கெங்கை கரையிலே காறாம் பசுக் கொன்ற தோஷத்
38. திலே போககடவேராகவும் யிப்படி சம்மதித்து எழுதிக்குடுத்த தான சாதனம் உ
39. ஆறுமுகம் ஞானப்பன் திருவம்பலம் ஆணையப்பன் முருகப்பன் கலிதீத்
40. தான் சூரியமூற்த்தி பஞ்சாட்ஷரம் அருணாசலம் னாச்சியப்பன் சக்கரை
41. யப்பன் நமசிவாயம் தெண்டாயுதம் சிவசிவா சபாபதி சித்தம்பலம்
42. ஏகாம்பரம் முத்தய்யன் ஆதினாறாயணன் கோவிந்தன் ரெங்கப்பன்
43. முத்துப்பெருமாள் வெங்கப்பன் மதுரனாயகம் தூதுபண்டாரம் பெ
44. ரியதம்பி வெள்ளையன் பிச்சன் நீலக்காறர் அழகபடையாச்சி வீரறாகுவ
45. செட்டி சிவந்தபாதம் தீத்தரசெட்டி தாண்டவராயன் அருணாசலம் வயி
46. த்தியலிங்கம் ( முனியப்ப செட்டி அய்யன்) வீரப்பன் சட்டையப்பன் குருவிசெட்டி கோபாலசெட்டி
47. செல்லன் லாலாப்பேட்டை மளிகைக்காறர் தானிசெட்டி காரிய
48. ம் தானப்பன் ஆலப்பாக்கம் முத்தப்பசெட்டி செட்டியப்பன் பாப்பு
49. செட்டி நல்லமுத்தான் கூளிசுகன்செட்டி காரியம் வேலாயுதசெட்டி
50. பள்ளிகொண்டாசெட்டி காரியம் வெங்கிடாசலம் வாக்கறக்கோட்டை வ
51. சவப்பன் கச்சாலை திருவம்பலசெட்டி தில்லைச்செட்டி திருவம்பலம்
52. நல்லாண்டசெட்டி யிளையாசெட்டி சின்னக்குட்டி பனைப்பா
53. க்கம் சிய்யாலசெட்டி வெங்கிட்டன் பாப்புசெட்டி உடையார்பாளைய
54. ம் நல்லாசெட்டி பிழைபெ(ா)றுத்தாசெட்டி உள்ளூர்க் கடைக்காறர் வா
55. ழிமுத்து முத்திரிசன் அருணகிரி மாரிமுத்து பலசரக்கு சட்டையப்ப
56. செட்டி அய்யனசெட்டி அருணாசலசெட்டி பறங்கிப்பேட்டை
57. டங்கசாலை பெத்துப்பத்தர் குமாரன் குமாரசுவாமி எழுதின பட்டையம் உ

# 8. பறங்கிப்பேட்டை உலாந்தாக் கம்பெனிச் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | உலாந்தா கம்பெனி |
| தானம் அளித்தோர் | : | உலாந்தா கம்பெனி பறங்கிப்பேட்டை வணிகர்கள் |
| காலம் | : | 31.12.1747 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 37 செ.மீ. x 25 செ.மீ. |

அமைப்பும் செய்தியும் :

நீண்டு உயர்ந்த கைப்பிடியின் அடிப்பக்கத்தில் நடராசரும், அன்னை சிவகாமியும் வரைகோட்டு ஓவியத்தில் வரையப்பட்டுள்ளனர். அவர்கள் இருபுறமும் வியாக்ரபாதரும், பதஞ்சலி முனிவரும் இருவரையும் வணங்கிய நிலையில் உள்ளனர்.

சண்முகத் தம்பிரான் அவர்கள் தில்லையில் திருப்பணி செய்தார். ஆயிரக்கால் மண்டபம், நாலு கோபுரம், பஞ்சாட்சரமதில் ஆகியவை திருப்பணி செய்யப்பட்டது.

பறங்கிப் பேட்டையில் வணிகம் செய்த ஆலந்து நாட்டைச் சேர்ந்த கம்பெனி வியாபாரிகள் சண்முகத் தம்பிரானின் தில்லைத் திருப்பணிக்குத் தாங்கள் விற்கும் பொருளில் ஒரு குறிப்பிட்ட தொகையை மகமையாக நிர்ணயம் செய்து தங்கள் கம்பெனி உள்ளவரை அளிப்பதாக உறுதி கூறியுள்ளனர். பறங்கிப்பேட்டை மக்கள் அளித்த முன்செப்பேடும் இதே நாளில் எழுதப்பட்டுள்ளது.

செப்பேட்டின் இறுதியில் நயினியப்ப முதலியார், சிவானந்தம், முத்தய்யன் ஆகியோர் கையொப்பமிட்டுள்ளனர். சமய ஒருமைப்பாட்டை விளக்கும் இச்செப்பேடு வரலாற்றுச் சிறப்பு மிக்கதாகும்.

செப்பேடு

1. ஸ்வஸ்திஸ்ரீ சால்லியவாகன சகாற்தம் 1669 யிதின் மேல் செல்லாநின்ற பிறபவ
2. வருசம் தையி மாசம் முதல் தேதி சிவராசாதானியாகிய பூலோக கயிலாசமாகிய சிதம்பர ஸ்தலத்தி
3. ல் அகிலாண்டகோடி பிறமாண்டனாயகராகிய சபாபதிக்கு யிரண்ணியவற்ம மகாராசா
4. னாளையிலே செயித திருப்பணியள் சாசுவதமாயிருக்கத்தக்கதாக ஆயிரக்கால் மண்டபம் னா
5. லு கோபுரம் பஞ்சாஷ்சரமதில் யிதுமுதலாகிய திருப்பணிகளெல்லாம் சீறண உத்தாறணமாயி பழுது
6. பாற்குற நிமத்தியம் செய்யத் துடங்கிய திருப்பணிவேலை என்னாளும் நடக்கத்தக்கதாக யிந்த மக

7. த்தாகிய தற்மத்துக்கு பறங்கிபேட்டை உலாந்தக்கும்பனி வற்தகர் யிந்த திருப்பணி கயி
8. ங்கிரியத்துக்கு மனோ வாக்காய் கறண திருகறண சுத்தியாய் சன்முகத்தம்பி
9. ரான்அவர்கள் முன்னிலையாய் மகமை நிண்ணையம் பண்ணி எழுதி
10. க் குடுத்த தான சாதன விபரம் னாங்கள் உலாந்தக் கும்பனியிலே வருஷ
11. ா வருஷம் ஒப்பந்தம் பண்ணி செலுத்துற பிடவை கட்டுகள் சகல தி
12. னுசுக்கும் வெத்திரியிலே வெட்டுபடி சென்ன கட்டுகளுக்கும் ப
13. ருத்திகிளார் கட்டுகளுக்கும் கும்பனி கட்டு ஒன்னுக்கு விறாகன் வீ
14. சம் விழுக்காடு வற்தகர் அவரவர் போட்ட கட்டுக்கு அவரவ
15. ர் கிடங்குலே கணக்கு பாத்து கூடின மகமை விறாகன் வரு
16. ஷா வருஷம் குடுக்க கடவோமாகவும் உலாந்தக் கும்பனி
17. உள்ளமட்டுக்கும் சாசுவதாமா யிந்த தற்மம் நடக்கத்தக்கதாக
18. யினிமேலும் எந்த வற்தகர் யிருந்து கும்பனி வற்தகம் பண்ணி
19. னாலும் புத்திர பவுத்திர பாரம்பரியமா யிந்த தற்மம் பரிபாலனம் பண்
20. ணி யிந்த நிண்ணையப்படிக்கு மகமை குடுக்க கடவோராகவும் யிந்த தற்
21. மம் ஆற்றும் லாபமாயிருக்கப்பட்ட மகத்தாகிய தற்மமானபடியினாலே
22. யிதுக்கு அனுகூல சிந்தினையாயிருந்து நடத்தின பேர்கள் யிகத்
23. திலே மகா பாக்கியவாங்களாயிருந்து பரத்திலே நிரதிசெய
24. மாகிய சுகாநந்தத்தை அனுபவிப்பார்கள் யிந்த தற்மத்துக்
25. கு மனோ வாக்காய் கறணத்தினாலே யாதாமொருவர் விகாத சிந்தி
26. னை நினைத்தாலும் விகாதம்பண்ணி யிந்த மகமை குடாமல் போ
27. னாலும் கெங்கைக் கரையிலே காராம்பசுவைக் கொன்ற தோஷ
28. த்திலே போகக்கடவோராகவும் யிந்தப்படி சம்மதித்து சிதம்பரயீ
29. சுபரர் சிவகாமி அம்மன் அவர்கள் பாதாரவிந்தத்துக்கு பறங்கிப்பே
30. ட்டை உலாந்தக் கும்பனி வற்(த)கர் மகமை நிண்ணையம் பண்
31. ணி எழுதிக்குடுத்த தான சாதனம்.

நயினியப்ப முதலியார்      சிவானந்தம்      முத்தய்யன்

# 9. சிதம்பரம் செப்பேடு

| | | |
|---|---|---|
| கொடை அளித்தோர் | : | தில்லை மூவாயிரவர் |
| காலம் | : | 13.12.1827 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 37 செ.மீ. X 25 செ.மீ. |

அமைப்பும் செய்தியும்:

நீண்டு உயர்ந்த அழகிய கைப்பிடியின் கீழ் நடராசர், சிவகாமி இருவர் உருவமும் வரைகோட்டு ஓவியத்தில் வரையப்பட்டுள்ளது. இருபுறமும் பதஞ்சலியாரும், வியாக்ரபாதரும் வணங்கிய நிலையில் நின்றுள்ளனர்.

சிதம்பரத்தில் உள்ள ஐந்து சபைகளில் இரணியவர்ம மகாராசா திருப்பணி செய்த இராச சபை நெடுங்காலம் திருப்பணி செய்யப்படாமல் இருந்தது. அதனை முத்தையத் தம்பிரான் அவர்கள் சமைய முறைப்படி மிகச் சிறப்பாகத் திருப்பணியை மேற்கொண்டார்.

அவர் திருப்பணி செய்யும் சிறப்பைக் கண்டு தில்லை மூவாயிரவர் அனைவரும் தினந்தோறும் அரைக்காற்காசு முதல் எவ்வளவு கொடுக்க முடியுமோ அவ்வளவு கொடுப்போம் என்று எழுதிக் கொடுத்த செப்பேடு.

இதில் 'நீரிற் குமிளி யிளமை' என்று தொடங்கும் குமரகுருபரரின் நீதிநெறி விளக்கப்பாடல் கொடுக்கப்பட்டிருப்பது குறிப்பிடத்தக்கதாகும்.

நீரிற் குமிளி யிளமை நெடுஞ்செல்வம்
நீரிற் சுருட்டும் நெடுந்திரைகள் – நீரில்
எழுத்தாகும் யாக்கை நமரங்காள் என்னே
வழுத்தாத தெம்பிரான் மன்று

(நீதிநெறி விளக்கம்)

## செப்பேடு

1. உ குருபாதம் சொஸ்திஸ்ரீ சாலியவாகன சகாப்த்தம் 1749 கலியா
2. ப்(ப்) தம் 4928 இதின்மேற் செல்லாநின்ற சற்வசித்தி வருஷம் காற்திகை
3. மாதம் 30 தேதி குருவாரமும் அஸ்த நஷ்சத்திரமும் கூடிய சுபதினத்தில் பூலோக கயிலாசமா
4. கிய சிதம்பர க்ஷேத்திரத்தில் சபாநடேசர் நடனஞ்செய்யும் சிற்சபை கனகசபை நடனச
5. பை தேவசபை ராசசபை யிந்த வைந்து சபையில் ராசசபை வெகுகாலஞ்சென்ற திருப்பணி
6. யாகையாலதிலிருக்கிற னூனாதிக்கங்களைப் பரிசோதித்துத் திருப்பணி செய்துவருகிற முத்தை
7. ய தம்பிரானவர்கள் சித்த விற்தியையும் திருப்பணி செய்துவருந்திறத்தையும் பார்த்து ராச
8. சபைத் திருப்பணி முழுதும் நிறைவேற்றுமென்பதைக் குறித்து தில்லை மூவாயிரவர்கள் சபாபதி கிரு
9. பையினாலே யிதினடியில் கையெழுத்து வைத்திருக்கிற தற்மகற்த்தாக்க ளனவருந்தற்ம
10. சாதனப் பட்டையம் பண்ணிக்கொடுத்தோம் இப்பொழுது திருப்பணி செய்துவருகி
11. ற ராசசபையிலு மந்த வாலையத்துக்குள்ளாகிய திருப்பணிகளுஞ் செய்துவரும்
12. படியாயவரவர்க்கு சபாபதி கொடுத்திருக்கிற சம்பத்துக்குத் தக்கதாய்த் தினமொன்று
13. க்கு அரைக்காற் காசு முதலவளவு திருவுளந்தோன்ற வைக்குதோ அவளவு குடுக்கு
14. றோமென்று கையெழுத்து வைத்துக்கொடுத்தோ மிந்த முதலை வைத்துக்கொண்டு மேல்
15. லெழுதிய முத்தைய தம்பிரானவர்கள் கீழ் பாரம்பரையமாகத் திருப்பணி செ
16. ய்துகொண்டுவரும்படி நாங்கள் கேட்டுக்கொண்ட காரணமேதென்னில் மே
17. லான சிவபுண்ணியமாகையினாலேயுஞ் சிறிய முயற்சியாற் பெரும்பய
18. ன் பெறுவது குறித்து நீரிற் குமிளி யிளமை நெடுஞ்செல்வ நீரிற் சுருட்டு நெடுந்தி
19. ரைக ணீரி லெழுத்தாகும் யாக்கை நமரங்கா ளென்னே வழுத்தாத தெம்பிரான் ம
20. ன்று என விளமை செல்வ மாக்கை நிலையாமை யென்பது குறித்தும் தற்மம் சாசு
21. வத மென்பது குறித்தும் சகல வேதாகம புராண சாஸ்திரங்களிநாலும் சகல
22. மான தேவர்களாலும் ரிஷிகளாலு மற்றுமுள்ள பெரியோர்களாலும் அனேக
23. விதமாய் முதன்மையென முறையிட்டுச் சொல்லுஞ் சிதம்பர ஸ்தலத்து
24. த் திருப்பணி முக்கியமென்பதைக் குறித்து மிந்தத் திருப்பணிக் குபகாரஞ்செய்
25. தவரிம்மையிற் சகல சம்பத்து மனுபவித்து மறுமையிலுஞ் சபாநடேசர் குஞ்சித
26. பாத பறம நிழலில் வீற்றிருப்பார்களென மகாவாக்கியங் கூறலாவது பெறலாமெ
27. ன்பது குறித்துஞ் செய்த கருத்தாமெனக் கொள்க இதற்கு மனோ வாக்குக் காயங்களா லுபகாரஞ் செய்தோ
28. ற்க்கு மபகாரஞ்செய்தோற்க்கு மவரவர்க்குத் தக்க பலனை சபாநடேசர் கொடுப்பரிந்தத் தி
29. ருப்பணிக்கு நல்ல புண்ணியவான்கள் யாவருமுபகாரஞ் செய்வார்களாகையாலே தற்
30. ம சாதனப் பட்டையஞ் செய்து கொடுத்தோம்.

# 10. சிதம்பரம் புதுமடம் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | தஞ்சை மராட்டியர் |
| அரசன் | : | சகசி (1684 – 1711) |
| காலம் | : | 21–1–1711 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 26 செ.மீ X 18 செ.மீ |

அமைப்பும் செய்தியும் :

மிகுதியான வேலைப்பாடுகள் எதுவுமில்லாமல் கோடுகளுடன் கூடிய கைப்பிடியுடன் உள்ளது. நான்கு ஓரங்களிலும் கோடுகள் வரையப்பட்டு அதன் உள்ளே எழுதப்பெற்றுள்ளது. செப்பேட்டின் தொடக்கத்தில் 'திருச்சிற்றம்பலம்' என்ற தொடர் காணப்படுகிறது. அத்தொடரின் முன்னும் பின்னும் பிள்ளையார் சுழிகள் இடப்பெற்றுள்ளன.

இத்தொடரின் கீழ், 'கற்பகங்கந்தன் காப்பு' என எழுதப் பெற்றுள்ளது. சிதம்பரத் தலத்தில் உள்ள பல விநாயகர்களில் சிறப்பாக மேற்குக் கோபுரம் அருகே உள்ள விநாயகருக்குக் ' கற்பக விநாயகன்' என்று பெயர். எனவே அக் கற்பக விநாயகருக்கும், இத்தலத்து முருகனாகிய கந்தனுக்கும் சேர்த்துக் காப்புக் கூறப்படுகிறது போலும்.

வழக்கமாகக் காணப்படும் மெய்க்கீர்த்திப் பகுதி சுருக்கமாகவே உள்ளது. அடுத்து விசயநகர அரசர்கள் சிலர் கூறப்பெறுகின்றனர்.

சிதம்பரம், 'வடகரை ராசாதி ராச வள நாட்டு வெண்ணையூர் நாட்டு வழுதலம்பட்டுச் சாவடியில்' இருப்பதாகக் குறிக்கப் பெற்றுள்ளது. சிதம்பரம் – ' தனியூர் பெரும்பற்றப்புலியூர்' என்றும், 'பூலோக கயிலாயம்' என்றும் கூறப்படுகிறது

கி.பி. 1711 ஆம் ஆண்டு மன்னன் சகசியின் ஆட்சிக்காலத்தில் வடகரையில் உள்ள புதுமடத்தில் திருவாதிரையன்று பௌர்ணமியை ஒட்டிவரும் பிரதோஷ காலத்தில் அபிடேகம், நைவேத்தியம், திருவிளக்கு, திருமாலை, திருநந்தவனம், மகேசுவர பூசை, துவாதசி வட்டம், பிராமண போசனம், பிச்சை கரபாத்திரம் ஆகியவற்றுக்காகச் சீகாழிச்சீமை ஏழு மாகாணத்து நாட்டாரும் பெரிய வகுப்பு, சின்ன வகுப்பு உட்படக் குடியானபேர் அனைவரும் கொடைச் சாசனம் எழுதித் தந்தனர்.

நடராசர் அருகில் 'பச்சை' என்று எழுதப்பட்டுள்ளது. அருகில் நடராசர் சிவகாமி அம்மையை வணங்கும் நிலையில் அம்பலவாணத் தம்பிரான் உருவம் பொறிக்கப்பட்டு அவர் பெயரும் எழுதப்பட்டுள்ளது.

செப்பேடு

முதல் பக்கம்

உ திருச்சிற்றம்பலம் உ

கற்பகங்கந்தன் காப்பு

1. உ ஶ்ரீமன் மகாமண்டலேசுரன் பாஷைக்குத் தப்புவ
2. ராய கண்டன் மூவராய (க)ண்டன் கண்டனாடு கொ
3. காண்டு கொண்டனாடு குடாதான் எம்மண்டலங் கொண்டு
4. யீழந் திறை கொண்டருளிய ராசாதிராசன் ராச
5. பரமேசுரன் ராசமாத்தாண்டன் ராசகெம்
6. பீரன் பூறுவ தெஷ்ணா பச்சிம உத்தர சது சமுத்திராதி
7. பதி கெசவேட்டைய் கொண்டருளிய வீரப்பிர
8. தாபன் அச்சுநதேவ மகராயர் கிஷ்ணதேவ மக
9. ராயர் பிறபுடதேவ மகராயர் புசபெலதேவ மக
10. ராயர் சீரங்கதேவ மகராயர் பிறுதிவி ராச்சியம்
11. பரிபாலனம் செய்தருளாநின்ட சகாற்தம் 16
12. 32க்கு மேல் செல்லாநின்ற வடகரை ராசாதி ரா
13. ச வளனாடு வெண்ணையூர் னாடு வழுதலம்பட்டுச்
14. சாவடி தனியூர் பெரும்பற்றப்புலியூரான பூலோ
15. க கயிலாசமாகிய சித(ம்)பர தலத்தில் ஞானப்பிறகா
16. சனத்தில் வடகரையில் புதுமடத்தில் விகுறுதி வருசம்
17. தையி மாதம் 12 தேதி ஆதித்தவாரமும் பூறுவமும் திருவாதிரை
18. நஷ்சத்திரமுங் கூடின புண்ணிய தினத்தில் பிறதோ
19. ஷட் காலத்தில் அபிஷேக நெவிவேதனம் திரு
20. விளக்கு திருமாலை திருநந்தவனம் மயேசுர
21. பூசை துவாதெசி வட்டம் பிராமண போசனம்
22. பிட்சை கரபாத்திரம் இது முதலான தற்மங்களுக்
23. கெல்லாம் ராசமான்ய ராசஸ்ரீ சாசி மகராசா
24. சரபோசி மகராசா துற்கோசி மகராசா இவர்கள்
25. புண்ணியமாக மாகாணம் அடுத்தக் கீழ்ச்சபை மால்
26. அஞ்சுக்கும் ராசாஸ்ரீறி சுபேய்தா ரய்யனவர்
27. கள் கட்டளையிட்டு நடப்பிக்கிற தன்ம சாதனப
28. ட்டையம் சீகாழிச் சீர்மை ஏழு மாகாணத்து
29. னாட்டாரும் குடியானபேர் சகலரும் பெரிய

30. வகுப்பு சின்னவகுப்பு உள்பட சம்மதித்து எழுதி
31. க்குடுத்த தற்ம சாதன பட்டையம் உள்மாகாணம்
32. 12 கலம் குத்தயம்பேட்டை மாகாணம் 12 கலம்

இரண்டாம் பக்கம்

பச் அ
சை ம்ப
லவ
ானை
தம்
பிர
ான்

33. வேளூர் அம்பலவான தம்பிரான் தற்மம்
34. பச்சைப் பெருமாள் நல்லூர் மாகாணம் உ
35. நெல் 12 கலம் பாசாலை மாகாணம் நெல் 9 கலம் குன்ன மரு
36. தூர் மாகாணம் நெல் 8 கலம் வேளூர் மாகாணம் நெல் 9 கலம் தீயெ
37. ன்கூர் மாகாணம் நெல் 8 கலம் பெரியவகுப்பு நெல் 15 கலம் சின்
38. னவகுப்பு நெல் 15 கலம் ஆக நெல் 100 கலம் திருக்கடவூர்ச் சீர்மை வடக்
39. கு வட்டம் உள் மாகாணம் நெல் 15 கலம் நல்லாடை மாகாணம் நெல் 20 கலம்
40. திருவிடைக்கழி மாகாணம் நெல் 15 கலம் திருத்திராச்சேரி மாகா
41. ணம் நெல் 15 கலம் கொட்டுச்சேரி மாகாணம் நெல் 10 கலம் திருச்சம்பள்ளி
42. மாகாணம் நெல் 15 கலம் ஆதனூர் மாகாணம் நெல் 10 கலம் ஆக மாகாணம்
43. 7க்கு நெல் 100 கலம் தெற்கு வட்டம் பேரள மாகாணம் நெல் 25 கலம் திருமருக
44. ல் மாகாணம் நெல் 20 கலம் திருநள்ளாறு மாகாணம் நெல் 20 கலம் நெடு
45. ங்காடு மாகாணம் நெல் 15 கலம் திருப்புகளூர் மாகாணம் நெல் 5 கலம்
46. திருக்கணபுர மாகாணம் நெல் 5 கலம் அம்பல மாகாணம் நெல் 10 கலம் ஆக ம
47. ாகாணம் 7க்கு நெல் 100 கலம் திருவெண்காட்டுச் சீர்மை மாகாண(ம்) 5க்கு
48. நெல் 50 கலம் தீவுச்சீமை வட்டம் 4க்கு நெல் 40 கலம் திருக்கடவூருச் சீர்மை ஆ
49. யமகமை சீயாழிச் சீர்மை ஆய மகமை வல்லத்துறை சீமை மக
50. மை யிந்தப்படியாக நடந்து வருகிறது யிந்தத் தர்மம் தாழ்
51. வில்லாமல் நடத்திவித்த பேர்கள் இகத்தில் மத்தயி
52. சொரியமும் பரத்தில் சாயூச்சிய பதமு பெற்று வாழ்வார்கள்.

# 11. வள்ளைக்குளம் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | சிவகங்கை அரசர் |
| அரசர் | : | அரசு நிலையிட்ட முத்து வடுகநாதப் பெரிய உடையாத்தேவர் |
| காலம் | : | 13.4.1763 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 23.5 செ.மீ X 19 செ. மீ. |

அமைப்பும் செய்தியும் :

இச்செப்பேடு பெரிய துளையையுடைய ஒற்றைக் கோட்டுக்கு உள்ளடங்கிய அழகான கைப்பிடியை உடையது. பெரிய எழுத்துக்களில் தெலுங்கில் ‘ஆறுமுகம் சகாயம்’ என முதல் பக்கத்தில் இரண்டு வரிகளாக எழுதப்பட்டுள்ளது.

இச்செப்பேடு சிவகங்கை அரசர் செப்பேடே ஆயினும் மேலாண்மை அரசராகச் சேதுபதி அரசரின் பெயர் குறிக்கப் பெற்றிருக்கிறது.

சிவகங்கை அரசர் அரசு நிலையிட்ட முத்து வடுகனாதப் பெரிய உடையாத் தேவர் அவர்கள் தருமபுரம் குருஞான சம்பந்த தேசிகர் சீடரான காசிவாசி குமரகுருபரத் தம்பிரான் அவர்களிடம் காசியில் மடம் கட்டி பிராமண போசனம், மகேசுவர பூசை, அன்னதானம் ஆகியவற்றுக்காகப் பாண்டி நாட்டில் கருத்துக்கோட்டை நாட்டில் துகவூர்க் கூற்றத்து வெள்ளைக்குளம் என்ற ஊரைக் கொடையாகக் கொடுத்ததை இச்செப்பேடு கூறுகிறது.

வெள்ளைக்குளத்தின் எல்லைகள்: கிழக்கு எல்லை கருமேனியம்மன் கோயில் புன்செய், அரமனை கரைக்கண்மாய் உள்வாய், தெற்கு எல்லை ஒச்சந்தட்டுப் புன்செய், துகவூர்க் குளக்கால், மேற்கு எல்லை சூச்சனாகுடி எல்லைப்புரவு : வடக்கு எல்லை கீழ்ச்சேத்தூர் புன்செய்ப் புரவும் வளையாத்தேவர் குடியிருப்பும் என்பனவாகும்.

இச்செப்பேட்டு வாசகத்தை எழுதியவர் மதுரையில் இருக்கும் வெள்ளாளரில் சொக்கநாதப் பிள்ளை மகன் சங்கர நாராயணன் என்பவர். செப்பேட்டை வெட்டியவர் தையல்பாகம் என்பவர்.

செப்பேடு

முதல் பக்கம்

ஆறுமுகம் சகாயம்

1. ஸ்வஸ்தி மன் மகாமண்டலேசுரன் அரியராய தளவிபாடன் பாசை
2. க்குத் தப்புவார் கண்டன் கண்டநாடு கொண்டு கொண்
3. டநாடு கொடாதான் பாண்டிமண்டல ஸ்தாபனாசாரியன் சோள
4. மண்டலப் பிரதிட்டாபனாசாரியன் தொண்டமண்டல சண்டப்பிரச
5. ண்டன் ஈளமுங் கொங்கும் யாட்பாணராயன் பட்டணமு மெம்மண்டலமும்
6. கண்டு கெசவேட்டை கொண்டருளிய ராசாதிராசன் ராசபரமேசுரன்
7. ராசமாற்த்தாண்டன் ராசகுலதிலகன் அரசராவண ராமன் அந்தம்பர கண்
8. டன் தாலிக்கு வேலி தளஞ்சிங்கம் இளஞ்சிங்கம் சேதுகாவலன் சேது
9. மூல ரட்சா துரந்தரன் தனுக்கோடி காவலன் தொண்டியந்துறை கா
10. வலன் செம்பிவளநாடன் தேவைநகராதிபன் முல்லை மாலிகைய
11. ான் அனுமக்கொடி கெருடக்கொடி புலிக்கொடி (புலிக்கொடி) யுடையான் மு
12. ம்மதயானையான் செங்காவிகுடை செங்காவிக்கொடி செங்காவி
13. ச் சிவிகையான் அசுவபதி கெசபதி நரபதி யிரணிய கெற்பயாசி ரெ
14. குனாதச் செதுபதியவ
15. ர்கள் பிறிதிவிராச்சி
16. ய பரிபாலனம் ப
17. ண்ணியருளாநி
18. ன்ற கலியுக சகா
19. த்தம் 4864
20. சாலியவாகன சா
21. காத்தம் 1685
22. இதன்மேற் செல்லா
23. நின்ற சுபானு வருசம் சித்திரை மாதம் 4 தேதி புதவாரமும் அமாவாசியும் அசு
24. வதியும் சபயோக சுபகரணமுங் கூடின சூரியோதபாரக புண்
25. ணிய காலத்தில் பாண்டி தேசத்தில்ப் பொதியமா மலையா
26. ன் வையை ஆறுடையான் புனப்பிரளை நாடன் குளந்தை நகரா
27. திபன் முல்லை மாலிகையான் பஞ்சகதி யிவுளியான் மும்மத யா
28. னையான் அனுமக்கொடி கெருடக்கொடி புலிக்கொடி கட்டி
29. ய புரவலன் மும்முரசதிரு முன்றிலான் திக்கெங்கு மானை
30. செலுத்திய சிங்கம் மேனாட்டுப்புலி தாலிக்குவேலி தளஞ்சி
31. ங்கம் இளஞ்சிங்கம் இரவிகுல சேகரன் ஆற்றுப் பாச்சி கடலி
32. ற் பாச்சி தொண்டியந்துறை காவலன் வாசுப்பயாகன் அரசு
33. நிலையிட்ட விசைய ரெகுநாதச் சசிவற்னப் பெரிய உடையா

### இரண்டாம் பக்கம்

34. த் தேவரவர்கள் புத்திரன் அரசுநிலையிட்ட முத்து வடுகனாதப் பெரி
35. ய உடையாத் தேவரவர்கள் தருமபுரம் திருஞான சம்பந்த தே
36. சிகர் சீஷரான காசிவாசி குமர குருபரத் தம்பிரானவர்
37. களுக்குத் தற்ம சாசனம் தாம்பிர சாசனப் பட்டயங் கொடுத்தபடி
38. தற்ம சாசனமாவது காசியிலே பெரிய உடையாத் தேவர் மடமு
39. ங் கட்டிப் பிராமண போசனம் மகேசுர பூசை அன்னதா
40. னம் நடப்பிவிக்கிறதினாலே இந்தத் தற்மத்துக்கு விட்
41. டுக் கொடுத்த கிறாமமாவது பாண்டி தேசத்தில் கரு
42. த்துக்கோட்டை நாட்டில் துகவூர்க் கூற்றத்து வ
43. ள்ளைக்குளம் கிறாமத்துக் கெல்லையாவது கீள்பா
44. ற்கெல்லை கருமேனியம்மன் கோவில் புஞ்சைக்கு
45. ம் அரமனைகரைக் கண்மா யுள்வாய்க்கு மேற்கு தெ
46. ன்பாற்கெல்லை ஒச்சந்தட்டுப் புஞ்சைக்கும் துகவூர்
47. க் குளக்காலுக்கும் வடக்கு மேற்பாற் கெல்லை சூச்சனா
48. குடி எல்லைப்புர(வு)க்கும் கிளக்கு வடபாற்கெல்லை கீள்ச்சே
49. த்தூர் புஞ்சைப் புரவுக்கும் வளையாதேவர் குடியிருப்புக்
50. கும் தெற்கு இப்படி யிசைந்த பெருநான்கெல்லைக் குள்ளிட்ட நஞ்
51. சை புஞ்சை திட்டு திடல் நிதி நிற்சேப செல தரு பாசாணம் அட்சீணிய ஆக
52. ாமியமென்று சொல்லப்பட்ட அட்டபோக தேச சுவாமியங்களும் தானாதி வினி
53. மய விக்றயங்களுக்கும் யோக்கியமாக சகல சமுதாயமும் சறுவமானிய
54. மாக ஆசந்திராற்கம் சீஷ பாரம்பரைக்கும் காசி அன்னதான தற்ம
55. த்துக்கு விட்டுக் கொடுத்தபடியினாலே ஆண்டனுபவித்துக் கொள்ளுவாரா
56. கவும் இந்த தற்மத்துக்கு இதம் பண்ணினவன் காசியிலே சிவப்பிறதிட்டை விட்
57. டுனுப் பிறதிட்டை கோடி பிர்மப் பிறதிட்டையும் பண்ணின புண்ணியத்
58. தை யடைவராகவும் இதற்கு யாதாமொருவன் அகிதம் பண்ணினவன்
59. காசியிலேயும் ராமீசுரத்திலேயும் கோடி கராவையும் கோடி பி
60. ராமணாளையும் கொன்ற பாவத்தை யடைவராகவும் இந்தப்படிக்குக் கு
61. மர குருபரத் தம்பிரானவர்களுக்கு முத்து வடுகனாதப் பெரிய உடை
62. யாத் தேவர்கள் இந்த அன்னதானப் பட்டயம் எழுதினேன் மதுரையிலி
63. ருக்கும் வெள்ளாளரில் சொக்கனாத பிள்ளை குமாரன் சங்கரநாராயண
64. ன் எழுத்து இந்தப் பட்டயம் வெட்டிநேன் தையல்பாகம் உ
65. ஸ்வதத் தாத்வி குணம் புன்யம் பரதத்தாநு பாலநம் பரதத்தாப ஹா
66. ரேண ஸ்வதத்தம் நிஷ்பலம் பவேத் : உ

# 12. ஆனையார் கோட்டைச் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | சிவகங்கை அரசர் |
| அரசு | : | அரசு நிலையிட்ட விசைய ரகுநாதப் பெரிய உடையாத் தேவர் |
| காலம் | : | 22.6.1782 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 27.5 செ.மீ X 19.5 செ.மீ |

அமைப்பும் செய்தியும் :

கைப்பிடியில் சிறிய அளவில் பிள்ளையார் சுழியும் அதன்கீழ் சிறு முத்தலைச் சூலமும் வரையப்பட்டுள்ளது.

சிவகங்கை மன்னர் அரசு நிலையிட்ட விசைய ரகுநாதப் பெரிய உடையாத் தேவரவர்கள் காசியில் பிராமண போசனத்திற்காகவும் மகேசுவர பூசையாக அன்னதானம் செய்யவும் ஆனையார் கோட்டை, மச்சூர் ஆகிய கிராமங்களைக் கொடையாக விட்ட விபரம் இச்செப்பேட்டில் கூறப்படுகிறது. இரண்டு கிராமங்களுக்கும் விரிவான எல்லைகள் கூறப்படுகின்றன.

சிவகங்கை அரச மரபினருக்குரிய மெய்க்கீர்த்திகள் சில கூறப்பட்டுள்ளன. அவற்றுள் சில இராமநாதபுரம் சேதுபதி அரசர்கட்கும் உரியவை.

இச்செப்பேட்டிற்கு மற்றொரு நகலும் காசிமடத்தில் உள்ளது.

*செப்பேடு*

*முதல் பக்கம்*

*ஆறுமுகம் சகாயம்*

1. ஸ்ரீ விசுவேசுவரரன்னபூரணி ஸகாயம்
2. ஸ்வஸ்திஸ்ரீமன் மஹா மண்டலேசுவரன்
3. அரியராய தள விபாடன் பாஷைக்கு தப்பு
4. வராய கண்டன் கண்டநாடு கொண்டு கொண்டநாடு கெ
5. ாடாதான் பாண்டிமண்டல ஸ்தாபனாசாரியன் சோ
6. ளமண்டலப் பிறதிட்டாபனாசாரியன் தொண்ட

7. மண்டல சண்டப் பிறசண்டன் ஈளமுங் கொ
8. ங்கும் யாட்பாணராயன் பட்டணமு மெம் மண்ட
9. லமுங் கண்டு கெசவேட்டை கொண்டருளிய ராச
10. ாதிராசன் ராசபரமேசுவரன் ராசமாற்த்தாண்
11. டன் ராசகுலதிலகன் அரசராவணராமன்
12. அந்தம் பரகண்டன் தாலிக்குவேலி தளஞ்சிங்கம்
13. இளஞ்சிங்கம் சேதுகா
14. வலன் சேதுமூலரட்சா
15. துரந்தரன் தனுக்கோ
16. டிகாவலன் தொண்
17. டியந்துறை காவல
18. ன் செம்பிவளநா
19. டன் தேவைநகராதிபன் முல்லை மாலி
20. கையான் அனுமக்கொடி கெருடக்
21. கொடி புலிக்கொடியுடையான் மும் மதயானை
22. யான் செங்காவிக்குடை செங்காவிக்கொ
23. டி செங்காவி சிவிகையான் அசுபதி கெச
24. பதி தனபதி நரபதி ரவிகுலபதி யிரணிய கெற்
25. பயாசி ரெகுனாத செதுபதியவர்கள் பிறிதிவி
26. ராச்சிய பரிபாலனம் பண்ணி யருளாநின்ற
27. சாலியவாகன சகாத்தம் 1704 கலியுக
28. சகாத்தம் 4883 இதன்மேல் செ
29. ல்லாநின்ற சுபகிறுது வருசம் ஆனி மாதம் 12 தேதி சுக்கில பட்
30. சமும் ஸ்திரவாரமும் திரையோதெசியு அனுழ நட்சத்
31. திரமும் சுபயோக சுபகரணமுங் கூடின சுபதி
32. னத்தில் பாண்டி தேசத்தில் பொதியமாமலையான்
33. வைகை ஆறுடையான் புனபிரளை ணாடன் குழந்தை நகர
34. ாதிபன் முல்லைமாலிகையான் பஞ்சகதியிவுளியான் மும்
35. மதயானையான் அனுமக்கொடி கெருடக்கொடி புலிக்
36. கொடி கட்டிய புரவலன் மும் முரசதிரு முன்றிலான் திக்கெ
37. ட்டும் ஆணை செலுத்திய சிங்கம் மேனாட்டுப்புலி தாலிக்கு
38. வேலி தளஞ்சிங்கம் இளஞ்சிங்கம் இரவிகுலசேகரன் ஆற்று
39. பாச்சி கடலில்பாச்சி தொண்டியந்துறை காவலன் வாசு
40. பேயாகன் அரசுநிலையிட்ட விசைய ரெகுனாதப் பெரியுடை
41. யாத்தேவரவர்கள் தருமபுரம் முத்துக்குமாரசுவாமி தே
42. சிகர் சீஷரான காசிவாசிக் குமரகுருபரத் தம்பிரானவ
43. ர்களுக்கு தற்ம்ம சாதனம் தாம்பிரசாதன பட்டையம்

## இரண்டாம் பக்கம்

44. கொடுத்தபடி தற்ம்ம சாதனமாவது காசியிலே கெங்கா தீர
45. த்திலே பெரிய உடையாத் தேவரவர்கள் தற்மம் பிராமண
46. போசன மாகேசுவரபூசை அன்னதானம் நடப்பிவைக்
47. குறதுனாலே இந்த தற்ம்மத்துக்கு விட்டுக்கொடுத்த கிறாம
48. மாவது பாண்டிதேசத்தில் மேமங்கல நாட்டில் திருக்கானை
49. ப்பேர் கூற்றத்தில் ஆனையார்கோட்டை கிராமத்துக்கு பெருநான்கெ
50. ல்கையாவது கீழ்பாற்கெல்லை யெலிக் கொளத்துக்கு
51. மேற்க்கு தென்பாற்க்கெல்கை இராசிக்கினிமிண்டான் கோட்டை க
52. ண்மாய்க்கும் கோட்டைகாட்டு வேலணைக்கும் வடக்கு மேற்பாற்க்கெ
53. ல்கை நேமத்து எல்லைக்கும் விறுதவயலுக்கும் கிழக்கு வடபாற்
54. க்கெல்கை ராதாநல்லூர் முடுக்கினாங்கோட்டை துக்கிணாங்க
55. ரைக்கு தெற்கு இந்த பெருநான்ங்கெல்கைக்கு உள்பட்ட யேந்தல் புர
56. வடை நஞ்சை புஞ்சை திட்டு திடலும் இதுவும் ஓடூர் வட்டகையில்
57. மச்சூர் கிராமத்துக்கு பெருநான்ங்கெல்கை கீழ்பாற்கெல்கை
58. பிலாத்துக்கு மேற்க்கு தென்பாற்க்கெல்கை விறுசுழி ஆற்றுவட
59. கரைக்கு வடக்கு மேல்பாற்க் கெல்கை விரிதம வயலுக்கு கி
60. ழக்கு வடபாற்க்கெல்கை வட்டாணம் வேண்ம்ப கண்மாய் தென்
61. ங்கரை சேதுபாதைக்கு தெற்க்கு இந்த பெருநான்ங்கெல்கை
62. க்குள்பட்ட யேந்தல் புரவடை நஞ்சை புஞ்சை திட்டு திடலும்
63. சேத்து யிந்த இரண்டு கிராமத்து நத்தம் திருவிருப்பு மேல்னோ
64. க்கியமரம் கீழ்நோக்கிய கிணறு நிதி நிட்சேப செல தரு பாஷா
65. ணம் அட்சிணிய ஆகாமியமென்று சொல்லப்பட்ட அஷ்ட்ட போ
66. க தேச சுவாமியங்களூ மனாதி வினிய விக்கிறையங்களுக்கு
67. ம் யோக்கியமாக சகல சமுதாயமும் சொற்ன்னாதாயம் குடிவார
68. காணிக்கை பலவரி கிராம கரைமணியம் பள்வரி வெள்ளைக்கு
69. டைவரி சுங்கத்தில் சேந்த ஆயக்கட்டு குடிவரி சாதிவரி யெப்
70. பேர்பட்ட பலவரியும் சறுவமானியமாக ஆசந்திராற் (ராற்)
71. கமாக நம்முட புத்திர பவித்திரம் பாரம்பரியமாகவும்
72. தங்கள் சீஷ பாரம்பரியமாகவும் காசியில் விசுவேசுவரசுவா
73. மி விசாலாட்சியம்மன் அபிசேக நைவேதனம் கெங்கா தீரத்தி
74. ல் அன்னதான தற்ம்மத்துக்கும் இந்த இரண்டு கிறாமமும் தாரா
75. தெத்த பூறுவமாக தாம்பிர ஸாதன பட்டையம் எழுதி கொ
76. டுத்தபடியினாலே ஆண்டனுபவித்துக் கொள்ளுவாராகவும்
77. யிந்த தற்ம்மத்துக்கு யிதம் பண்ணினவர்கள் காசியிலே கோடி
78. சிவ பிரதிஷ்டை கோடி விற்ம பிறதிஷ்டையும் புண்ணிய
79. த்தையடைவராகவும் யிதற்க்கு யாதாமொருவர் அகித

80. ம் பண்ணினவன் காசியிலேயும் ராமீசுரத்திலேயும் கோ
81. டி காராம்பசுவையும் கோடி பிறாமணாளையும் கொன்ற பா
82. வத்தையடைவாராகவும் யிந்தபடிக்கு குமரகுருபரத் தம்பி
83. ரானவர்களுக்கு விசைய ரெகுனாதப் பெரிய உடையாத் தேவ
84. ரவர்கள் யிந்தப்படி தற்ம்ம சாதன பட்டையம் எழுதிக் கொ
85. டுத்தோம் ராயசம் சொக்கபிள்ளை குமாரன் தற்மராயபிள்ளை
86. கையெழுத்துப்படிக்கு யிந்த தாம்பிர சாதனம் எழுதினேன்
87. சிவகெங்கையிலிருக்கும் தையல்பாகம் ஆசாரி குமா
88. ரன் ஆறுமுகம். ஸ்வதத் தாத்வி குணம் புண்யம் பரத
89. தத்தாநு பாலனம் பரதத்தாப ஹாரேண ஸ்வதத்தா
90. ம் நிஷ்பலம் பவேது : ஸ்வதத்தாம் பரதத்தாம்
91. வாயோ ஹரேத் வசுந்தராம் ஷஷ்டி வர்
92. ஷ ஸஹஸ்ராணி விஷ்டாயாம் ஜாயதே க்ரு
93. மி : ஏக ஸ்மிந்து ரக்ஷிதே ஜந்தௌ யத்ர கா
94. ஷ்யாம் ப்ரயத்நம் த்ரைலோக்ய ரக்ஷணா
95. த் புண்யம் யத் ஸ்யாத சஸ்யாந்ந ஸம்
96. ஸய: ஸ்வ ஸஹாயம்.

# 13. புதுக்குளம் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | சிவகங்கை அரசர் |
| அரசர் | : | அரசு நிலையிட்ட விசைய ரகுநாதப் பெரிய உடையாத் தேவர் |
| காலம் | : | 2.5.1796 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 32 செ.மீ X 21 செ.மீ |

அமைப்பும் செய்தியும் :

கைப்பிடியில் ஸ்ரீ ராமஜெயம் என்ற பொறிப்புடன் சிறிய அளவில் முத்தலைச் சூலமும் சிவலிங்கமும் பொறிக்கப்பட்டுள்ளது. கைப்பிடியின் தலைப்பில் சிறு பிள்ளையார் சுழி உள்ளது.

சிவகங்கை மன்னர் அரசு நிலையிட்ட விசைய ரகுநாதப் பெரிய உடையாத் தேவர் அவர்கள் காசித் தலத்தில் விசுவநாதர் – விசாலாட்சி அம்மைக்கு அபிடேகம், நெய்வேத்யம், சத்திரம், அன்னதானம் ஆகியவற்றிற்குப் புதுக்குளம், மாங்குடி என்ற இரண்டு ஊர்களையும் கொடையாக அளித்த விபரத்தை இச்செப்பேடு கூறுகிறது.

இரண்டு தானக் கிராமங்களுக்கும் விரிவான எல்லைகள் கொடுக்கப்பட்டுள்ளன. இக்கொடைகள் திருப்பனந்தாள் காசிமடத்து அதிபர் சடையப்பத் தம்பிரான் அவர்கள் வசம் அளிக்கப்பட்டது.

இச்செப்பேட்டில் சிவகங்கை அரசர் மரபிற்குச் சிறந்த பல மெய்க்கீர்த்தித் தொடர்கள் கூறப்பட்டுள்ளன. இவை வேறு எங்கும் கூறப்பெறாதவைகளாகும்.

இச்செப்பேட்டை எழுதியவர் இராயசம் தர்மராயபிள்ளை மகன் சொக்கு. செப்பேட்டை வெட்டியவர் சிவகங்கை தையல்பாகம் ஆகாரி மகன் ஆறுமுகம் என்பவர்.

செப்பேடு

முதல் பக்கம்

ஸ்ரீ ராமஜெயம்
ஸ்வஸ்தஸ்ரீமன் மகாமண்டலேசுபரன் அரியராய தழ வி
பாடன் பாசைக்கி தப்புவார் கண்டன் கண்டநாடு கொண்டு
கொண்டநாடு கொடாதான் பாண்டிமண்டல ஸ்தாபனாசாரி
யன் சோழமண்டலப் பிறதிஷ்ட்டாபனாசாரியான் தொண்
டமண்டல சண்டப்பிறசண்டன் யீளமுங் கொங்கும் யாப்பா
ணராயன் யெம்மண்டலமுங் கண்டு கெஜவேட்டை கொண்டருளிய
ராசாதிராசன் ராசபரமேசுபரன் ராசமாத்தாண்டன் ராசகு
லதிலகன் ராசகெம்பீரன் ராசகண்டீரவன் ராசாக்கள் தம்பிரா
ன் அரசராவணராமன் அந்தம்பிரகண்டன் ரற்றின கிரீடாதிபதி
ரற்றின சிங்காசனாதிபதி சூரியகுலதுங்கன்ச் சந்திரகுல திலகன்
கிஷ்ணாவதாரன் கிளைவாளவந்தோன் குளந்தை நகராதிபன்
முல்லைமாலிகையான் விபூதி ருத்திராகூஷ மாலிகையாபரணன்
வீரவெண் மாலிகையான் சிவபூசை குருபூசை மறவாத வங்கி
ஷாதிபன் காளைநாயகற் காரிய துரந்திரன் வேதாந்தவேதியன்
வேதியர்காவலன் பரத நாடக விர்ப்பன்னன் பங்கய வதனன் ச
ங்கீத சாயித்திய வித்தியாவினோதன் கலைதெரியும் விர்ப்பன்னன் கெவு
ளி விலாசன் பொதியமாமலையான் வைகையாறுடையான் புனற்ப்
பிறளையனாடன் பாண்டிய வழநாடன் தொண்டியந்துறை காவலன்
துஷ்ட்டரில் துஷ்ட்டன் துஷ்ட்ட நிக்கிறக யிஷ்ட்டர் பாலனன் ப
ட்டமானங் காத்தான் பரதேசிகாவலன் பஞ்சகெதி யிவுளியான்
பஞ்சவற்ன்ன பாவாடையான் மும்மதயானையான் மும்முரசதிரு மு
ன்டிலான் திக்கெங்கு மாணை செலுத்திய கெஜசிங்கம் மேநாட்
டுப்புலி மலைகலங்கினு மனங்கலங்காதான் தாலிக்குவேலி தான்
டுவார் முண்டன் தளஞ்சிங்கம் இளஞ்சிங்கம் பகைமன்னர் சிங்கத்து
ரைராசன் அஷ்ட்டதிக்கு மனோ பயங்கரன் யிரவிகுலசேகரன்
யிவுளி பாவடி மிதித்தேருவார் கண்டன் தொட்டவரான வலியச்
சருவி வளியில் கால்நீட்டி வீரதண்டை
சேமத்தலை விளங்குமிரு தா
ளினான் புவனேகவீரன் வன்னி
யராட்டந் தவிள்த்தான் ஒட்டியர் தள விபாடன் பஞ்சவற்னன்
ப் பரிராவுத்தர் கொட்டமடக்கிய சமரகோலாகலன் சற்க்குண சு
பாஷிதன் சாடிக்காறர் க்ண்டன் சாமித்துரோகியள் மிண்டன் அ
டைக்கலங் காத்தான் யேளை பங்காளன் எதிரிட்ட மருவலர்கள்
சிரமுறுள வெட்டி நிலையிட்ட தீரன் பரராஜசேகரன் பரரா

36. ச கேசரி பரதள விபாடன் அடியார் வேளைக்காரன் உபைய சா
37. மர உல்லாச நளி(ன)க்காறன் கொட்டமடக்கிய வய்யாளி நாரா
38. யனன் கலியுகராமன் கற்னாவுதாரன் கொற்றவர் திருமுகநீக்
39. கிசிக ராசராசன் மறுமன்னியர் கெற்பம் விளங்கியராசன்
40. மருமன்னியர் வந்து வணங்கிய பாதன் மருமன்னியர் கேசரி ம
41. ருமன்னியர் கெசப்புலி பொருமன்னர் அஞ்சிப் புகலிடந்தேட திரு
42. மலங்காட்டில் செயவேலெடுத்தோன் கெடிமன்னர் காலாந்தகன் கி
43. றிதுற்க்கம் வனதுற்க்கம் ஜெலதுற்க்க முடையான் ஆற்றில்ப் பாச்சி
44. கடலில்ப் பாச்சிய மதப்புலி பளமொளி தவராப் பரசு பாசுத மகி
45. மையாய் செகமெல்லாம் புகளச் செங்கோல் நடத்துவோன் செங்கா
46. விக்குடை செங்காவிக்கொடி செங்காவிச் சிவிகையான் அனும
47. க்கேதனன் கெருடகேதனன் வியாக்கிறம கேதனன் சிம்ம கே
48. தனன் பூலோக தெய்வேந்திரன் சத்திய அரிச்சந்திரன் அன்னக்
49. கொடி விளங்கிய தீரன் குடைக்கி கற்னன் பொறுமைக்கி தற்மபு
50. த்திரன் வில்லுக்கு விசையன் பரிக்கி நகுலன் ஸாஸ்த்திரத்துக்கு
51. சகாதேவன் தமிழுக்கு அகத்தியன் ஆக்கினைக்கு சுக்குறீபன் அழ
52. குக்கு வாலசீவகன் திலத னுதல் மடமாதர் மயலுற்று மடலெழுதும் தி
53. ருப்புய சுமுகன் வீரலட்சுமி விசையலட்சுமி சவுபாக்கியலட்சுமி
54. தானலட்சுமி சவுமியலட்சுமி காருண்னிய சவுரியலட்சுமி
55. கீற்த்தியலட்சுமி அஷ்ட்ட லட்சுமியும் பொருந்திய வீறாதிவீரன் வீ
56. ர கெம்பீரன் விசைய மாற்த்தாண்டன் சூரநில்ச்சூரன் துரையள்
57. சிகாமணி சேதுஅரசு நிலையிட்டோன் சிவகெங்கை ராஜிய ப
58. ரி பாலகரான அசுபதி கெஜபதி தனபதி நரபதி ரவிகுலபதி அ
59. ன்னதான சோம வாசுபேயராகிய காசிப கோத்திரத்தில் ஸ்ரீம
60. து அரசுநிலையிட்ட விசைய ரெகுனாதப் பெரிய உடையாத்தேவரவர்
61. கள் பூதான சாஸனம் பண்ணிக்கொடுத்தபடி கலியுக சகாப்த
62. ம் 4897 சாலிவாகன சகாப்தம் 1718 யிதன் மே
63. ற் செல்லாநின்ற நள நாம ஸம்வத்ஸரத்தில் உத்திராயணத்தில்
64. ஹேமந்த ரிதுவில் புஷிய மாஸம் 3 தேதி குருவாரமும் சதுற்தெசி
65. யும் புணர்பூச நட்செத்திரமும் வச்சிரநாமயோகமும் வணிக க
66. ரணமும் கூடின சுபதினத்தில் சறுவமானிபமாக பூதான சாஸ
67. னம் பண்ணிக்கொடுத்து பூதான சாஸனமாவது ஆனந்தாயி தற்
68. மம் காசியில் கெங்கா தீரத்தில் விசுவநாதசுவாமி விசாலா
69. ட்சி அம்மன் அபிஷேக நெய்வேதனத்துக்கு சத்திரம் அன்னதா
70. னத்துக்கு தருமபுரம் சிவஞான சம்பந்த தேசிகர் சீஷரான கா
71. சிவாசி சடையப்பத் தம்பிரான் அவர்கள் பாரிசமாக தாம்பிரசா

இரண்டாம் பக்கம்

72. ஸனம் செய்துகொடுத்த கிறாமமாவது பாண்டி தேசத்தி
73. ல் துகவூர் கூத்தத்தில் கருத்துக்கோட்டை நாட்டில் துகவூர்
74. மாகாணத்தில் புதுக்குளத்துக்கு பெருநான்ங் கெல்கை கண்ட
75. படி கீள்பாற் கெல்லை தொகவூர்க் கண்மாயுள்வாயிக்கு மேற்க்கு
76. தென்பார்க் கெல்கை வடக்கு நானூர் யெல்கைக்குஞ் சாளைக்கி
77. றாமங் குளக்காலுக்கும் வடக்கு மேல்பார்க் கெல்கை பெருமா
78. ளேந்தல் யெல்கைக்கு கிளக்கு வடபாற் கெல்லை ஒச்சந்
79. தட்டு யெல்கைக்கு தெற்க்கு யின்னாங்கெல்கைக்குள்பட்ட பு
80. துக்குளம் கிறாமம் 1 கேரளசிங்க வளநாட்டில் திருப்பத்
81. தூர் தாலூக்காவில் கிறாமம் மாங்குடிக்கி பெருநாங் கெல்
82. கை கண்டபடி கீள்பாற் கெல்கை காரையூர் புரவுக்குந் தி
83. ருவிடையாட்டம் புரவுக்கு மேற்க்கு தென்பாற் கெல்கை நா
84. ட்டார்மங்கலம் புரவுக்கும் கோட்டையிருப்பு புரவுக்கும்
85. வடக்கு மேல்பாற் கெல்கை மணக்குடி புரவுக்கு கிளக்கு வட
86. பாற் கெல்கை காரையூர் புரவுக்கு தெற்க்கு யின்னாங் கெல்கை
87. க்குள்பட்ட மாங்குடி கிராமம் 1 யிந்த ரெண்டு கிறாமம் பெருநா
88. ங் கெல்கைக்குள்பட்ட கம்மாய் யேந்தல்கள் நஞ்சை பு
89. ஞ்சை திட்டு திடல் குட்டங் குளி நத்தந் திருவிருப்பு பாசி படு
90. கை மேல்நோக்கிய மரம் கீள்நோக்கிய கிணரு பலவரி
91. குடிவாரக் காணிக்கை வெள்ளைக்கொடைவரி கீதாரவ
92. ரி கரைமணியம் மற்ற யேதொரு வரிப்பும் நிதி நிட்சேப ஜலம் தரு
93. பாஷாணாட்சினி யாகாம்யம் சித்த சாத்தியமென்று சொல்லச்
94. செய்த அஷ்ட்ட போக தேச சுவாமியங்களும் சருவமாநி
95. யமாக தானபூருவமாக தாம்பிர சாதன பட்டையம் கட்டளை
96. யிட்டோம் ஆச்சந்திராற்க ஸ்தாயி ஆகச் சந்திராதித்த சந்
97. திர சந்ததிப் பிரவேசமுள்ளவரைக்கும் யெங்கள் புத்தி
98. ரா பவுத்திர பாரம்பரையாகவும் தங்கள் ஷிசியாள் ப
99. ாரம்பரையாக ஆண்டநு பவித்துகொண்டு தற்ம பரிபாலின
100. ம் பண்ணிக்கொண்டு வருவார்களாகவும் இந்த தற்மத்தை யாதா
101. மொருத்தர் பரிபாலினம் பண்ணிந பேர்கள் காசியிலேயு
102. ம் கங்கைக் கரையிலும் ராமேசுவரத்தில் தனுக்கோடியி
103. லும் கோடி சிலிங்கப் பிறதிஷ்ட்டையும் கோடி விறும
104. ப் பிறதிஷ்ட்டையும் விஷ்னு பிறதிஷ்ட்டையும் கோதாநம்
105. பூதாநம் கன்னியாதானமும் பண்ணிந பலனைப் பெருவராக
106. வும் இந்த தற்மத்தை யாதாமொருத்தர் அகிதம் பண்ணின பே
107. ர்கள் காசி ராமேசுபரந் தனுக்கோடி கெங்கைக் கரையிலு
108. ங் கோடி விறும சத்தியு மாதாபிதாவையும் அனேகங் கோ

109. டி காராம் பசுவையும் கொன்ற தோஷங்களிலே போக கட
110. வாராகவும் தாந பாலந யோர் மத்யே தாநா ஸ்ரயோநு பாலநம்
111. தாநாத் ஸ்ர்க்க மவாப்நோதி பாலநாத் அச்சுதம் பதம்: ஸ்வதத்தாத்
112. வி குணம் புண்யம் பரதத்தாநு பாலநம் பரதத்தாப ஹாரேண ஸ்வ
113. தத்தம் நிஷ்பலம் பவேது: இந்த சாசனம் எழுதினேன் ராயசந் த
114. ற்மராயபிள்ளை குமாரன் சொக்கு ஸ்வஸ்த லிகிதப்படிக்கி தாம்பு
115. ர சாதன மெழுதினேன் சிவகெங்கையிலிருக்கும் தைய்யல்பா
116. கம் ஆசாரி குமாரன் ஆறுமுகம் கையெழுத்து உ
117. ஆறுமுக நாதாய:

# 14. சின்னம்பட்டிச் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | மதுரை நாயக்கர் |
| அரசன் | : | விசயரங்க சொக்கநாத நாயக்கர் |
| காலம் | : | கி.பி. 1726 |
| மொழி | : | தெலுங்கு |
| அளவு | : | 27. செ.மீ X 21 செ.மீ. |

அமைப்பும் செய்தியும் :

இச் செப்பேட்டின் கைப்பிடி உடைந்து மீண்டும் பற்றவைக்கப்பட்டுள்ளது. கைப்பிடியில் அடிப்பகுதியில் மலர்மாலை சூட்டப்பெற்று ஒரு சிவலிங்கமும் அதன் முன்பு ஒரு முத்தலைச் சூலமும் வரையப்பட்டுள்ளது. பிற வேலைப்பாடுகள் இல்லை.

ஒரு மகர சங்கராந்திப் புண்ணிய தினத்தில் காசி விசுவநாதருக்கும் விசாலாட்சி அம்மைக்கும் நித்திய பூசைக் கட்டளைக்கும், கார்த்திகை, விசாகப் பூசைக்கும், அன்னதானத்திற்கும், காசியில் வாழும் பிராமணர்கட்கு வருட அர்ச்சனை, மகேசுவரபூசை, வில்வத் தோட்டம் ஆகியவற்றிற்கும் தாமிரபரணித் தீரத்தில் அரியநாபுரம் செவ்வலாகோட்டம் சிற்றூர் சின்னம்பட்டியைக் கொடையாகக் கொடுக்கப்பட்ட செய்தியை இத்தெலுங்குச் செப்பேடு கூறுகிறது.

இக்கொடை காசிமடத்து அதிபர் தில்லைநாயகத் தம்பிரான் அவர்கள் வசம் அளிக்கப்பட்டுள்ளது.

சிவராமய்யா என்பவர் இச்செப்பேட்டை எழுதியுள்ளார்.

*செப்பேடு*

*முதல் பக்கம்*

1. *ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் பஞ்ச திருவடிராச சப்தாங்க ஹரணன்*
2. *சத்ருராஜ்ய பஹரண துரந்தரன் வில்லுக்கு விசயன் கதைக்கு வீமன் துஷ்ட நிக்ரக*
3. *சிஷ்ட பரிபாலனத்திற்கு பரசுராமன் சத்தியவாக்கிற்கு அரிச்சந்திரன் கொடைக்கு கர்ணன் சௌந்*
4. *தர்யத்திற்கு மன்மதன் புத்திக்கு பிருகச்பதி குதிரை ஏற்றத்திற்கு நகுலன் யானை ஏற்றத்*
5. *திற்கு தேவேந்திரன் வீர பிரதாபன் இராசகண்டீரவன் சத்ரு பயங்கரன் பாண்டிய சிம்மாச*

6. நாதீசுவரன் காச்யபகோத்திரன் விசுவநாதநாயக்கன் கிருஷ்ணப்ப நாயக்கண் வீரப்ப நாயக்
7. கன் குமார கிருஷ்ணப்ப நாயக்கன் முத்துவீரப்ப நாயக்கன் சொக்கநாத நாயக்கனுக்கு பௌத்திரன்
8. அரங்க கிருஷ்ண முத்து வீரப்ப நாயக்கனுக்கு புத்திரன் ஆன இராச விசயரங்க சொக்கநாத நா
9. யக்கன் ஸ்ரீவிசயரெங்க சொக்கநாத நா
10. யக்கர் ஐயா அவர்கள்
11. பாண்டிய பிருதிவி ராச்ய
12. பரிபாலனத்தில் நின்ற சாலிவாகன சகாப்தங்கள் 1647 கல்யப்தங்
13. கள் 4826 ஆகிய இன்றைய விசுவாவசு நாம வருடம் புஷ்ய சுத்தம் 7 ஆம் நாள் வியாழக்
14. கிழமை பூர்வபாத்திரா நட்சத்திரம் சுபகரண சுபயோகங்கள் கூடி
15. ய தைமாதம் 1 ஆம் நாள் உத்திராயணம் மகர சங்கிராந்தி இந்த புண்ய தினத்
16. தில் காசி தர்மம் ஆதீனத்திற்குக் கர்த்தாவான காசி தில்லைநாயக பண்டாரம்
17. அவர்களுக்கு கொடுத்த பூதான தாமிர பட்டயம் காசியில் எமது தர்மம் பூர்வா பூர்
18. வமாக நடந்து வருகிற கிராமத்துக்கு விசுவேசுர சுவாமி விசாலாட்சியம்மை அவர்களுக்கு நித்திய
19. கட்டளை பூசை உபரி கார்த்திகை பூசை வைகாச பூசை நித்திய

## இரண்டாம் பாகம்

20. கட்டளை அன்னதானம் காசிவாசிகளாகத் தலவாசம் செய்கிற பிராமணர்களுக்கு வருட
21. அர்ச்சனங்கள் மாகேசுரபூசை வில்வதோட்டம் இவை முதலான தர்மங்
22. களுக்கு கொடுத்து மதுரைக்கு தெற்கே தாமிரபர்ணிக்கு வடக்குத் தீரத்தில்
23. அரியநாபுரம் செவ்வலாகோட்டம் சிற்றூர் சின்னம்பட்டி அதனில் சேர்ந்த உப
24. கிராமங்கள் தாராபூர்வமாக கொடுத்ததனாலே அதனில் கண்
25. ட நஞ்சை புஞ்சை மாவடை மரவடை தோப்பு துரவுகள் அநாதி தரிசு குளங்கள் கி
26. ணறுகள் நிதி நிட்சேபம் சலதரு பாஷாண அட்சின ஆகாமி காட்டிய அட்ட காமியங்
27. களும் ஆசாந்திரார்க்கத்தாயியாக அனுபவித்துக்கொண்டு காசியில் எமது தர்மங்கள் சாச்
28. வதங்களாக நடத்திக்கொண்டு வருவார்கள் இந்த தர்மத்திற்கு எவர் வாக்
29. கு சகாயம் அர்த்தசகாயம் செய்கிறார்களோ அவர்களுக்கு காசியில்
30. கோடி சிவலிங்க பிரதிட்டை செய்த பலத்தைப் பெறுவார்கள்
31. இந்த தர்மத்திற்கு எவராகிலும் விகாதம் செய்கிறார்களோ
32. அவர்கள் காசியில் ஆயிரம் கபிலைப் பசுக்களைக் கொன்ற பாவத்தில்
33. போவார்கள் தானபாலன யோர்மத்யே தானாச்ரயோனு பாலனம்
34. தானாத் ஸ்வர்க மவாப்நோதி பாலனா தச்யுதம் பதம்:
35. ஸ்வதத் தாத்வி குணம் புண்யம் பரதத்தானு பாலனம்
36. பரதத்தாப ஹரேண ஸ்வதத்தம் நிஷ்பலம் பவேத்:
37. இந்த சாசனம் எழுதியது சிவராமய்யா.

# 15. அபிநவமங்கலம் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | துறையூர்ப் பாளையக்காரர் |
| பாளையக்காரர் | : | வெங்கடாசல ரெட்டியார் |
| காலம் | : | 21.1.1745 |
| மொழி | : | தெலுங்கு |
| அளவு | : | 23 செ.மீ X 17.5 செ.மீ |

அமைப்பும் செய்தியும் :

அழகிய கைப்பிடியின் கீழ் மையமாக அழகிய சிவலிங்கம் வரையப்பட்டுள்ளது. அலங்கரிக்கப்பட்ட விதானத்தின் கீழ்ச் சிவலிங்கம் நன்கு வரையப்பட்டுள்ளது. இருபுறமும் தூண்கள் அமைக்கப்பட்டு ஒரு மண்டபத்தில் உள்ளது போல் சிவலிங்கம் காணப்படுகிறது.

சிவலிங்கத்தின் இருபுறமும் சூரிய சந்திரர் உருவம் பொறிக்கப்பட்டுள்ளது. இச் சிவலிங்கம் இராமநாதன் ஆகிய இராமலிங்கம் ஆகும். இராமன் பிரதிட்டை செய்ததாக ஐதீகம்.

தேவி மலைவளர் காதலி (பர்வத வர்த்தினி) நான்கு திருக்கரங்களுடன் நின்ற நிலையில் உள்ளார். இருகரங்கள் மலர்களைத் தாங்கியும் இருகரங்கள் அபயம் – வரதம் நிலையிலும் உள்ளன. எதிரில் அழகிய நிலையில் நந்திதேவர் வரையப்பட்டுள்ளார். நந்தியின் பின்புறம் கொடிமரம் வரையப்பட்டுள்ளது. வரைகோட்டு ஓவியத்தில் சிற்பி இராமேசுவரம் கோயில் காட்சியைக் கண்முன் நிறுத்துகிறார்.

துறையூர்ப் பாளையங்காரர் வெங்கடாசல ரெட்டியார் அவர்கள் இராமேசுவர அன்னதான தர்மத்திற்கு அபிநவமங்கலம் என்ற ஊரைச் சர்வமானியமாக அளித்ததை இச்செப்பேடு கூறுகிறது. இராமேசுவரத்தில் இருந்த கிரி தனுஷ்கோடி சாஸ்திரி வசம் இக்கொடை அளிக்கப்பட்டது.

இச்செப்பேட்டை துறையூர்ப் பாளைய இராயசம் ராமலிங்கய்யா எழுதியுள்ளார். இறுதியில் பாளையக்காரர் கையொப்பமிட்டுள்ளார்.

### செப்பேடு

#### முதல் பக்கம்

1. ஸ்வஸ்திஸ்ரீ விஜயாப்யுதய சாலிவாஹன ச
2. காப்தம் 1666 கல்யப்தம் 4845 ஆகிய இன்றைய ரக்
3. தாக்ஷி நாம வருடம் புஷ்ய பகுள அமாவாஸ்
4. யை சோமவாரம் சிரவண நட்சத்திரம் மகோதய புண்
5. ய காலம் கூடிய இந்த சுபதினத்தில் ஸ்ரீமத் ரா
6. சாதிராச ராசபரமேசுவர வரபிரதாப ஸ்ரீவர வெங்
7. கடபதிதேவ மகாராயர் அவர்கள் கனககிரி நக
8. ரத்தில் ரத்ன சிம்மாசநா ரூடராய் பிருத்வி சாம்ராச்
9. சியம் செய்து கொண்டிருக்கையில் ராமேசுவரம் கிரி தனுஷ்கோடி
10. சாஸ்திரி அவர்களுக்கு சதுர்த்த கோத்திரம் செட்டிக்குளம் பல்ல கு
11. ல நல்லப்ப ரெட்டியார் அவர்கள் பேரன் இலிங்காரெட்டி அவர்கள் புத்
12. திரன் வெங்கடாசல ரெட்டி அவர்கள் உதக தாராபூர்
13. வமாக கொடுத்த தானசாசனத்திற்கு கிராமம் எப்படி என்றால்
14. திருச்சிராப்பள்ளி சாவடி வடக்குக்கரை மளவநாடு
15. தெண்டவெளிப்பத்து பாச்சூர்
16. மாகாணத்திற்கு நாயகமான துறையூர் சீ
17. மையில் அபிநவமங்கலம் என்னும் கிராமம் ராமேசுவ
18. ரம் அன்னதான தர்மத்திற்கு எழுதி அன்னதா
19. னதர்மத்திற்கு தாராபூர்வமாய் கொடுத்தோம் ஆ
20. கையினாலே அதனில் கண்ட நஞ்சை புஞ்சை மாவடை மர
21. வடை நிதி நிட்சேப சல தரு பாஷாண அட்சீணி ஆ
22. காமி சித்த சாத்தியங்கள் அஷ்ட போக தே

#### இரண்டாம் பக்கம்

23. ஜ சாமியங்கள் தானாதி விநிமய விக்
24. கிரயங்கள் யோக்கியமாக ஆசந்திரார்க்
25. க ஸ்தாயியாய் புத்திர பௌத்திரர்கள் பாரம்பர்யமாக அ
26. நுபவித்துக் கொண்டு தர்மபரிபாலனம் செய்ப
27. வர்கள் ஆவாரென ராமேசுவரம் கிரி தநுஷ்கோடி சாஸ்திரிகள்
28. அவர்களுக்கு சதுர்த்த கோத்திரம் செட்டிக்குளம் பல்ல குல நல்லப்ப
29. ரெட்டியார் அவர்களின் பேரனான லிங்காரெட்டி அவர்கள் புத்திரனான வெங்க
30. டாசலரெட்டி அவர்கள் எழுதிக் கொடுத்த தானசாசனம்
31. தாமிரப்பட்டயம் ராயசம் ராமலிங்கய்யா கை
32. எழுத்து தானபாலன யோர்மத்யே தானாச்ர
33. யோனு பாலனம் தானாத் ஸ்வர்க்க மவாப்நோதி பாலநா

34. தச்சுதம் பதம்; ஸ்வதத்தா த்வ்வி குணம் புண்யம் பரதத்தா
35. நு பாலனம் பரதத்தாப ஹாரேண ஸ்வதத்தம் நிஷ்பலம்
36. பவேத்: ஏகைவ பகிநி லோகே ஸர்வேஷா மேவ பூத்வி
37. ஜா நபோஜ்யா ன கரக்ராஹ்ய விப்ர தத்தா வசுந்
38. தரா: இத்த தர்மத்திற்கு எவர் கெடுதல் செய்கிறார்களோ
39. அவர்கள் காசியில் பசுவினைக் கொன்ற பாவத்தில்
40. போவார்கள்.

வெங்கடாசலபதி

# 16. திருமாஞ்சோலைச் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | பாப்பாநாடு சமீன் |
| சமீன்தாரர் | : | இராமலிங்கம் விசையாத் தேவர் |
| காலம் | : | 1736 |
| மொழி | : | தமிழ் |
| அளவு | : | 22.5 செ.மீ X 18.3 செ.மீ |

அமைப்பும் செய்தியும் :

முக்கால் வட்ட வடிவில் அமைந்த கைப்பிடியின் அடிப்பகுதியில் பீடத்தின்மேல் முத்தலைச் சூலமும் அதன்கீழ் ஒரு சிவலிங்கமும் வரைகோட்டு ஓவியத்தில் வரையப் பட்டுள்ளது.

இராசேந்திர சோழவளநாட்டுப் பொய்யூர்க் கூற்றத்தில் உள்ளது பாப்பாகுடி நாடு. அங்கு குறுநில மன்னராக விளங்கி அதிகாரம் செலுத்துபவர்கள் விசையாத்தேவர் பரம்பரையினர். அம்மரபில் வந்த ராசஸ்ரீ இராமலிங்கம் விசையாத் தேவரவர்கள் காசியில் அன்னதானக் கட்டளைக்காகக் காசிமடத்து அதிபர் தில்லைநாயகத் தம்பிரான் அவர்களிடம் திருமாஞ்சோலை என்ற ஊரைக் கொடையாக அளித்ததை இச்செப்பேடு கூறுகிறது.

*செப்பேடு*

*முதல் பக்கம்*

1. உ ஒப்பம் வேதனாயகம் துணை உ
2. உ ஸ்வஸ்திஸீமந் மகாமண்டலேசுரன்
3. பாசைக்குத் தப்பு வராத கண்டன்
4. மூவராய கண்டன் கண்டனாடு கொண்டு
5. கொண்டனாடு குடாதான் பொம்மண்டல
6. மும் கொண்டு யீழமும் துறை கொண்
7. ட ராசாதிராச ராசபரமேசுரன் ராசமாற்த்
8. தாண்டன் ராசகெம்பீரன் ராசம
9. னோ பயங்கரன்க் கட்டாரிச் சாளுவ
10. ன் கருதலர் கோளரி துட்ட நிக்கிறக சிட்ட பரி
11. பாலக சங்கீத சாயுத்திய வித்தியா

12. வினோதர் சகல தான தற்ம்ம பரிபாலக
13. ன் அன்னசத்திர சோமன் அஷ்ட்ட லெ
14. கூஷ்மி வரப்பிரசாதகன் மல்லாரி விரு
15. து னாயகன் அச்சுததேவ மகாராயர் விருப்
16. பாஷ்சிராயர் கிஷ்ட்டணராயர் ராமதே
17. வராய(ா)ர் சீரெங்காராயர் இவர்கள்
18. பிறுதிவி ராச்சியம் பரிபாலனம் பண்ணி
19. அருளாநின்ற சாலிவாகன சகாற்த்தம்
20. 1658 கலியுக சகாற்த்தம் 4
21. 835 இதின்மேல் செல்லாநின்ற ரா
22. ட்சத வருசம் தை மாதம் 4 தேதி ராசராசேந்திர வ
23. ளனாடு ராசேந்திர சோஷ வளனாடு வெ

இரண்டாம் பாகம்

24. ாய்யூர் கூத்தத்து பாப்பாகுடி னாடு இன்
25. னாடு பாப்பா னாட்டிலிருக்கும் ராசஸ்ரீ ஆதி
26. ஆவிடை விசையா தேவ(ர்) ர(ா) வ(ா)ர்கள் நல்
27. லவன் விசையா தேவ(ர்) ர(ா) வ(ா)ர்கள் குமாரர்
28. ராசஸ்ரீ ராமலிங்கம் விசையா தேவர் அவர்கள் க
29. ாசி கேஷத்திரத்தில் அன்னதானக் கட்டளைக்கு த
30. ற்ம்மபுரம் திருஞ்ஞான சம்மந்த மூற்த்தி சீஷ்சன்
31. காசியில்வாசி தில்லை னாயக தம்பிரானவ
32. ர்களிடமாய் திருமான்சோலை யென்கு
33. ற கிறாமம் அன்னதானக் கட்டளைக்கி குடுத்து
34. இருக்குறோம் நன்றாய் முப்போகமும் காலே
35. மற்க்கப் பயிர் ஏத்திக்கொண்டு சந்திராதித்
36. தவரைக்கும் ஆண்டு அனுபவித்துக் கொண்
37. டு சுகத்திலே இருக்கவும் இந்தத் தற்மத்துக்
38. கு திருமான்சோலை விட்டு இருக்குறபடியி
39. னாலே இதற்க்கு யியாதாமொருவன் விய்ய
40. ாதங்கள் நினைத்ததே உண்டானால் கெங்
41. கைக் கரையிலே அனந்த கோடி காராம்
42. பசுவைக் கொண்ண தோஷத்திலே ே
43. பாகக்கடவராகவும் உ
44. ஸ்வதத்தாத்வி குணம் புண்யம் பரதத்தாநு ப
45. ாலநம் பரதத்தாப ஹாரேண ஸ்வதத்தம்
46. நிஷ்பலம் பவேத்: உ விஸ்வலிங்கம் துணை உ
47. த்யாகராஜம்.

# 17. தேவநாதபுரம் செப்பேடு

| | | |
|---|---|---|
| மரபு | : | மராட்டியர் |
| காலம் | : | 18.1.1654 |
| மொழி | : | வடமொழியும் மராத்தியும் |
| அளவு | : | 27 செ.மீ X 13 செ.மீ |

அமைப்பும் செய்தியும் :

நீள் சதுர வடிவில் அமைந்துள்ள இச்செப்பேடு எவ்வித வேலைப்பாடும் இன்றிக் காணப்படுகிறது. கைப்பிடி போன்ற தனியான பகுதி எதுவுமில்லை.

இதில் விக்கிரம சக ஆண்டு கணக்கிடப்பெற்றுள்ளது (விக்கிரம ஆண்டு 1710 ) கி.பி 18.1.1654 இல் இச்செப்பேடு பொறிக்கப்பட்டுள்ளது. கி.பி 1653 ஆம் ஆண்டிலேயே பீசப்பூர் சுல்தானின் படைத்தளபதி முல்லா முகமதுவுடன் சேர்ந்து கொண்டு தஞ்சை முதல் மராட்டிய மன்னன் முதலாம் ஏகோசியின் தந்தை சாசி சோழநாட்டின்மீது படை எடுத்துள்ளார். அவருடன் மராட்டிய மாவீரர்களும், மக்களும் தமிழகத்தின் பல பகுதிகட்கும், சோழநாட்டுப் பகுதிகட்கும் வந்துள்ளனர். தஞ்சை மராட்டிய ஆட்சி நிறுவப்படுவதற்கு முற்பட்ட சில மராத்தி மொழிக் கல்வெட்டுக்கள், தென்ஆர்க்காடு, வட ஆர்க்காடு மாவட்டத்தில் கிடைக்கின்றன.

விநாயகருக்கு வணக்கம் கூறி இச்செப்பேடு தொடங்குகிறது. கி.பி 1654 ஆம் ஆண்டு மோடா ஹாதீ யவனீ சதனா சாகுவின் பேரனும், சூரசிசாகுவின் மகனும் ஆகிய வீரசீ சாகுநாத் என்பவரால் தேவநாதபுரத்திற்கு நடுவில் நிலம் வாங்கப்பட்டுக் கட்டப் பெற்ற 14 வீடுகளில் மோடஹாதீய திரிவேதி விட்டல துவிவேதியின் பேரனும், ஜக்ருண துவிவேதியின் மகனும் ஆகிய பிரபாகர துவிவேதிக்கு ஒரு வீடு கொடையாகக் கொடுக்கப்பட்டது. அந்தணராகிய அவருக்கு வீட்டுடன் பசு, படுக்கை, சமையல் பாத்திரங்கள், தானியம், குடை காலணிகள் ஆகியவைகளும் கொடுக்கப்பெற்றன.

இச்செப்பேடு தேவாஜி பண்டிதர் மகன் ஆவுஜி பண்டித வைத்தியரால் எழுதப் பெற்றது. இறுதியில் தொடர்புடையவர்களின் கையொப்பங்கள் மோடி எழுத்துக்களில் காணப்படுகின்றன.

## செப்பேடு

ஸ்ரீகணேசாய நமஹ ஸம்வத் 1710 மாக மாதம் சுக்கிலபட்சத் துவாதசியில் கொடைப் பத்திரம் எழுதப்பட்டது.

மோடா ஹாதீ யவனி ஸதனா சாஹுவின் பேரர்களுள் ஒருவரும், சூரஜி சாஹு மக்களுள் ஒருவரும் ஆகிய வீரஜி சாஹுநாத் என்பவரால் தேவநாதபுரத்திற்கு நடுவில் நிலம் வாங்கப்பட்டு அங்கே பதினான்கு வீடுகள் அவராலேயே கட்டப்பெற்றன. அவற்றுள் வடக்குத் திசையில் ஒரு வீட்டை மோடா ஹாதீய திரிபேதி விட்டலத் துவிவேதியின் பேரனும், ஜக்ருண துவிவேதியின் மகனும், உபமன்ய கோத்திரத்தவரும், யஜுர்வேதியும், மாத்யந்தினி பிரிவினை சேர்ந்தவரும் ஆகிய பிரபாகர துவிவேதி சர்மா என்னும் அந்தணருக்குப் பசு, படுக்கை, சமையல் பாத்திரங்கள், தானியம், குடை, காலணிகள் ஆகியவைகளால் நிரம்பிய வீடு சுயநினைவுடன் இராமபிரானுக்குச் சமர்ப்பிக்கப்படுகிறது என்னும் எண்ணத்தோடு கொடையளிக்கப்பட்டது. அவ்வீட்டிற்கு அருகே தெற்கு நோக்கிய இரு வீடுகள், மேற்கு நோக்கிய ஒரு வீட்டிற்குச் செல்லும் தெரு, ஒரு வடக்கு நோக்கிய தெரு, ஒரு கிழக்குப் பார்த்த வீடு, இரு வீடுகளுக்குப் பிறகு இணைந்துள்ள வடக்கு நோக்கிய இரு வடிநீர் கால்களுடன் கூடிய பெரிய வீடு ஒன்று ஆகியவை உள்ளன. கிழக்கில் உள்ள தெருவை அடுத்து இணைந்துள்ள கிழக்கு நோக்கிய வீடு இரு நீர் வடிகாலொடு கூடிய மாடிவீடு. தெற்குப்புறச் சாலையை அடுத்து தெற்குப்புற நீர்வடிகால் செல்லுகிறது. கிழக்கு, வடக்கு, தெற்கில் இந்த வீட்டைச் சார்ந்த சுவர்களுக்கு மேற்கில் சாமராஜ பண்டிதருடையது. இவ்வீட்டின் எல்லை கிழக்கில் நான்கு வீடுகள் உள்ள வரிசை . . . . . . . . . . . அந்த நீர் வடிகாலில் . . . . . . . . . . . வடக்கில் உள்ள பூமியில் அதற்குப்பிறகு நிலத்தில், வீட்டின் நிலைவாயிற் படியில், பாதியும் பிரபாகரத் துவிவேதியின் அநுபவத்திற்கு உரியது. தெற்கில் 14 வீடுகள் உள்ள வரிசையில் மேற்கில் சாமராஜ பண்டிதர் வீடு. வடக்கில் இராஜ வீதி, வீட்டின் வாயில் கிழக்கு நோக்கியது. வீட்டின் நீர்வடிகால் கிழக்கில் செல்கின்ற வடக்கு இராஜ வீதியில் செல்கிறது. அனைத்து வீடுகளும் நிலைவாயிற்படிகளும் கிழக்கு நோக்கியுள்ளன. ஒன்று மட்டும் மேற்கு நோக்கி உள்ளது. மற்றொன்று வடக்கு நோக்கியது. மற்ற மூன்றும் எல்லாத் தலைவாயிற்படி போன்று சாதாரணமானவை. இத்தகைய நான்கெல்லைகளுக்குட்பட்ட முழு வீடு பிரபாகர துவிவேதிக்கு அளிக்கப்பட்டது. அதோடு இனி எனக்கு எவ்விதத் தொடர்பும் இல்லை. இவ்வறச் செயல் என்னைச் சேர்ந்தவர்கள் அனைவராலும் பாதுகாப்பதற்குரியது. கிணறு, அறச் சாலை ஆகிய அனைத்தும் மகாருத்திரம் போன்ற அறச் செய்கைகளுக்காக நிறுவப் பெற்றனவாகும். இந்த வீட்டுக்காரர் இதை அழிக்கவோ, ஒற்றி வைக்கவோ, விற்கவோ கூடாது. வீரஜீ சாஹுவின் பேரன் ஸாஹுஜியின் ஆணையின் வண்ணம் தேவாஜி பண்டிதரின் மகன் ஆகிய ஆவுஜி பண்டித வைத்தியரால் இப்பத்திரம் எழுதப்பட்டது.

# 18. சேதுபதி செப்பேடு

சேதுபதி மன்னர் ஒருவர்க்குரியதாகக் கருதப்படும் குறைச் செப்பேடு ஒன்று உள்ளது. இச்செப்பேடு 22.5 செ.மீ நீளமும் 18.5 செ.மீ அகலமும் உடையது.

ஏழு வரிகள் மட்டும் எழுதப்பட்டு முற்றுப் பெறாமல் குறையாக உள்ளது. வேலைப்பாடுகளோ வரைகோட்டு ஓவியங்களோ எதுவும் இல்லை.

1. ஸ்வஸ்திஸ்ரீமன் மகாமண்டலேசுவரன் அரியராய தள விபாடன் பாசை *
2. . . . . . . . . . . . . . . . . . . . . . . .
3. ட நாடு கொடாதான் பாண்டிமண்டல ஸ்தாபனாசாரியன் சோள
4. மண்டலப் பிறதிட்டாபனாச் சாரியன் தொண்ட மண்டல சண்டப்பிரச
5. ண்டன் ஈளமுங் கொங்கும் யாட்பாணராயன் பட்டணமு மெம் மண்டலமுங்
6. கண்டு கெசவேட்டை கொண்டருளிய ராசாதிரா சன்
7. ராசமாத்தாண்டன் ராசகுலதிலகன் ராசராவண ராமன் அந்தம் பரகன்
8. டன் தாலிக்குவேலி தளஞ்சிங்கம் இளஞ்சிங்கம் சேதுகாவலன் . . . . .

இச்செப்பேட்டில் இரண்டாவது வரி எழுதப் பெறாமல் காலியிடம் விடப்பெற்றுள்ளது.

* குறியுள்ள இடத்தில்
‘க்குத் தப்புவராய கண்டன் கண்ட னாடு
கொண்டு கொண்’

என்ற பகுதி இருக்க வேண்டும்.

# 19. திருவையாற்றுச் செப்பேடு

திருவையாற்றுக்குரிய செப்பேடு ஒன்று முழுவதும் எழுதப்பெறாமல் குறையுடன் காணப்படுகிறது. கைப்பிடியில் பஞ்சநதம் என்று எழுதப்பட்டுள்ளதால், இச் செப்பேடு திருவையாற்றுக்குரியதாக இருக்கலாம் என்று கருதப்படுகிறது.

பஞ்சநதம் என்ற தொடருக்குக் கீழ் பெரிய அளவில் சிவலிங்கம் வரையப்பட்டுள்ளது. சிவலிங்கத்திற்கு மாலை அணிவிக்கப்பட்டுள்ளது. இருபுறமும் பெரிய அளவில் விநாயகரும், நின்ற நிலையில் திருமால் உருவமும் வரைகோட்டு ஓவியத்தில் அழகிய முறையில் வரையப்பட்டுள்ளது.

இடையில் ஸ்ரீராமஜெயம் என்று பெரிய எழுத்துக்களில் தெலுங்கில் எழுதப்பட்டுள்ளது. செப்பேட்டின் தொடக்கத்தில்

1. ஸ்வஸ்தி ஸ்ரீமன் மஹாமண்டலேஸ்வரன் அரியராய தள விபாட
2. ன் பாசைக்குத் தப்புவராயர் கண்டன் மூவராயிர கண்டன்
3. கண்டர்கண்டன் கண்டையப் பிறதாபன் கட்டாரிச் சாளு

என்ற மூன்று வரிகள் மட்டும் எழுதப்பட்டுள்ளன.

செப்பேடு எழுதும் முறையை அறிந்து கொள்ள இச்செப்பேடு நன்கு உதவுகிறது. வரைகோட்டு ஓவியங்கள் வரையப்பட்டு, மங்கலச் சொல் வரையப்பட்ட பின்னரே செப்பேட்டுச் செய்திகள் வெட்டப்படுகின்றன என்பதை இதன் மூலம் நாம் அறிகின்றோம்.

# 20. புள்ளிருக்கு வேளூர்ச் செப்பேடு

புள்ளிருக்குவேளூர் என்னும் வைத்தீசுவரன் கோயிலில் 1847 ஆம் ஆண்டு அட்சயலிங்கத்தம்பிரான் அவர்கள் செய்யத் தொடங்கிய திருப்பணியை இக்குறைச் செப்பேடு சுட்டிக் கூறுகிறது. காவேரியாற்றின் கரை சிறப்பிக்கப்படுகிறது. இச்செப்பேடு 35 செ.மீ. நீளமும் 18 செ.மீ. அகலமும் உடையது.

செப்பேடு

1. ஸ்வஸ்திஸ்ரீமந் சாலிவாகன சகாப்தம் 1769 கலியுகாதி 4948 இதிமேல் செல்லாநி
2. ன்ற பிலவங்க வருசம் சித்திரை மாதம் 11 தேதி சுக்குறவாரம் கிருதிகை நஷ்சத்திரம் சித்தயோகம் கூ..
3. கம் அக்ஷய திருதியை புண்ணியகாலத்தில் உபயகாவேரி மத்தியில் பூர்வ பச்சிம சுவர்ணபுரிச
4. வேதாரண்ணி க்ஷேத்திறத்தை உடையதாய் நிம்பவன சறகாண்டவன பிறதேசத்தில்
5. ஸ்ரீ ராமசனகித்தர் ஜடாயு வேதங்களால் பூதப்பட்டு விளங்கும் புள்ளிருக்கும் வே
6. ளூர் ஸ்ரீவைத்தினாதசுவாமி கோவில் பணிவிடைச் சிறந்த பத்திமானாயும் சிவனடியார்
7. களில் சிரேஷ்டனாயும் சபானுக்கிறக உடையனாயும் இருக்கும் தம்பிறான் அட்சயலிங்க தம்
8. பிறான் சுவாமிகளும் மேற்படி க்ஷேத்திரத்தில் நானாபுரத்திலுள்ள சோழநாட்டை சீர்திருத்து
9. ம் காவேரி ஆற்றின் கரையிலிருந்து தோன்றிய ஜலத்தாபனார்க்காவன வரும் கிறாம
10. த்தில் உத்திறத்திரா வென்னும் ....

# 21. வடமொழிச் செப்பேடு -1

வடமொழியில் நந்திநாகரி எழுத்துக்களில் 21 செ.மீ நீளமும் 14 செ.மீ அகலமும் உடைய நான்கு ஏடுகளில் எட்டுப் பக்கங்களில் இச்செப்பேடு எழுதப்பட்டுள்ளது.

27.12.1383 அன்று விசய நகர மன்னர் புக்கருடைய மகன் இரண்டாம் ஹரிஹரர் ஆட்சி செய்யும்போது (1377–1404) அவருடைய அமைச்சர் முத்தய்ய தண்ட நாயகன் 'புன்னத்தூர்' என்ற ஊரை 'முத்தய்ய தண்ட நாயகபுரம்' என்று பெயர் மாற்றி சிதம்பரம் கோயிலுக்குக் கொடையாகக் கொடுத்ததை இச்செப்பேடு விளக்குகிறது.

சிதம்பரம் வியாக்ரபுரம் என்றும், நடராசர் கனகசபா நாயகர் என்றும் குறிக்கப் பெறுகிறார். புலிக்கால் முனிவரான வியாக்ரபாதர் வணங்கிய காரணத்தால் சிதம்பரம் வியாக்ரபுரம் எனப்பட்டது. தமிழில் ' பெரும்பற்றப் புலியூர்' என்று அழைக்கப் பெறும்.

இச்செப்பேட்டில் முத்தய்ய தண்ட நாயகன் பற்றிய புகழ்மொழிகள் பல கூறப்பட்டுள்ளன. புனிதக் துங்கபத்திரைக் கரையும் விருப்பாட்சனின் புகழும் கூறப்பட்டுள்ளன. கிரியா சக்தியின் பெருமைகள் பலபடக் கூறப்பட்டுள்ளன.

முக்கியமான இந்த விசயநகரக் காலச் செப்பேடு இன்னும் விசயநகர வரலாற்றில் குறிக்கப் பெறவில்லை.

சிதம்பரம் கோயில் காசிமடத்தின் மேற்பார்வையில் இருந்த காரணத்தாலேயே வரலாற்றுச் சிறப்புமிகு இச்செப்பேடு காசிமடத்திற்கு வந்துள்ளது.

இச்செப்பேட்டைப் பற்றிய ஆய்வு விரிவாகச் செய்யப்பெற வேண்டும்.

# 22. வடமொழிச் செப்பேடு - 2

வடமொழியில் கிரந்த எழுத்துக்களில் 21 செ.மீ நீளமும் 15 செ.மீ அகலமும் உடைய 4 ஏடுகளில் ஏழு பக்கங்களில் இச்செப்பேடு எழுதப்பட்டுள்ளது.

சிதம்பரம் தலம் பற்றிய மிகமிக முக்கியமான வரலாற்றுச் செய்தியை இச்செப்பேடு கூறுகிறது.

சிதம்பரம் நடராசர் கோயிலில் 76 ஆண்டுகள் பூசை இல்லாமல் இருந்தது. 23.4.1387 அன்று விசயநகர மன்னர் இரண்டாம் ஹரிஹரன் காலத்தில் (1377 – 1404) 76 ஆண்டுகளுக்குப் பின் 77 ஆம் ஆண்டு பூசை முன்பு போலச் சிறப்பாக நடைபெற்றது.

வழுதலம்பட்டு ராச்சியத்தைச் சேர்ந்த சிதம்பரம் சபாநாதர் ஆகிய நடராசருக்கு 6000 பொற்காசுகளை விருபாட்சன் கொடுத்தான். அவன் மன்னன் ஹரிஹரனின் சகோதரன். அவனே கோயிலில் நடராசரைப் பிரதிட்டை செய்து பூசையைத் தொடங்கியவன்.

மாலிக்காபூர் 1311 இல் தமிழ்நாட்டின் மீது படையெடுத்தான். அவ்வாண்டு தொடங்கி 76 ஆண்டுகள் சிதம்பரத்தில் பூசை இல்லை என்பதை அறிகிறோம்.

பீஜப்பூர் சுல்தான் படையெடுப்பின்போதுகூட 24.12.1648 முதல் 4.11.1686 முடியச் சிதம்பரத்தில் இருந்த நடராசர் படிவம் குடுமியா மலையிலும், மதுரையிலும் வைத்துப் பாதுகாக்கப்பட்டதாகத் திருவாரூர்க் கோயிலில் உள்ள செப்பேடுகள் கூறுகின்றன. இது பற்றிய நான்கு செப்பேடுகள் தஞ்சை மராட்டியர் செப்பேடுகள் நூலில் வெளியாகியுள்ளன.

சில மாதங்கள் கழித்து ஹரிஹரனும் 2000 பொன் கொடையாக அளித்துள்ளான். முன்பு இருந்தவாறே பூசை முதலியன செய்யத் தக்க ஏற்பாடுகள் செய்யப் பெற்றன.

சிதம்பர வரலாற்றில் மிகவும் முக்கியமான செய்திகளைச் கூறும் இச்செப்பேடு கூறும் செய்திகள் விசயநகர வரலாற்றிலோ சிதம்பரம் வரலாற்றிலோ இன்னும் பதிவாகவில்லை. இச்செப்பேடு பற்றியும் ஆய்வாளர்கள் விரிவாக ஆய்வு செய்தல் வேண்டும்.

## 23. வடமொழிச் செப்பேடு - 3

ஒற்றை ஏட்டில் ஒரு பக்கம் மட்டுமே எழுதப் பெற்ற செப்பேடு அண்மையில் தான் படி எடுக்கப்பட்டது. வரலாற்றுக் குறிப்புக்கள் எதுவும் இன்றி சிதம்பரம் நடராசர் பற்றிய புகழ்மொழிகள் மட்டும் மிகச்சிறந்த வடமொழிச் சுலோகங்களாக உள்ளன.

செப்பேடு முற்றுப் பெறவில்லை. சிதம்பரத்திற்குரிய மிகச் சிறந்த வடமொழி இலக்கியமாக இது திகழ்கிறது. எஞ்சிய பகுதிகளையும் தேடி விரிவாக ஆய்வு செய்யப் பெறுதல் வேண்டும்.

## 24. தேரூர் வில்லிச் செப்பேடு

நாஞ்சில் நாட்டுச் கீழ்ப்பேரூர் மன்னர் வீர ரவிபால மார்த்தாண்ட வர்மராய சிறவாய் மூத்தவர் 1734 ஆம் ஆண்டு தருமபுரம் ஆதீனத்தலைவர் அவர்கட்கு தேரூர் வில்லிகள் பற்றில் நிலம் அளித்த செய்தியை மிகவும் விரிவாக இச்செப்பேடு கூறுகிறது. நில அளவைகளும், அந்நிலத்திற்குரிய விதை அளவுகளும் அதன் வருவாயிலிருந்து பெறவேண்டிய நெல், பொன் போன்ற அளவுகளும் பல குறியீட்டில் குறிக்கப்பட்டுள்ளன. நாஞ்சில் நாட்டில் மடம் ஏற்படுத்திய செய்திகளும் உள்ளன.

சோழநாடு புனல்நாடு என்று கூறப்பட்டுள்ளது. அரசன் கற்குளத்து உடையார் விளாகத்தில் எழுந்தருளியிருக்கும்போது இக்கொடை கொடுக்கப்பட்டது. இச்செப்பேட்டை எழுதியவன் கோட்டாறு சிற்பன் நல்ல மாடன் அணைஞ்ச பெருமாள் மார்த்தாண்டன் சிறப்புரந்தான் என்பவன். அரசன் பெயரால் மார்த்தாண்டம் புதுவூர் என்ற ஊர் ஏற்படுத்தப்பட்டது.

பிற்சேர்க்கை 1

## கல்வெட்டில் காசித்தம்பிரான்

புதுக்கோட்டை மாவட்டம், திருக்கோகர்ணத்தில் உள்ள பெரியகுளத்தில் வடகரையில் உள்ள விநாயகர் கோயில் வடபுறச் சுவரில் கி.பி. 17 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்று எழுத்தமைதியை வைத்துக் கால்ம் கணிக்கத்தக்க கல்வெட்டு ஒன்று காணப்படுகிறது. அக்கல்வெட்டில் 'காசித்தம்பிரான்' என்பவர் குறிக்கப்பட்டுள்ளார்.

அக்கல்வெட்டின் வாசகம் கீழ்வருமாறு உள்ளது.

1. *ஆதிநாராயணதேவர்*
2. *நாளையில் கொடுத்த தன்மம்*
3. *சிவந்தெழுந்த பல்லவராயர்*
4. *உபையம் கோணவயல் னான்*
5. *கெல்லையும் . . . . . காசித்தம்பிரான்*
6. *உபையம் . . இளமனாவயல் குழி 500*
7. *கயிலாச பண்டாரம் உள்பட்டார் உபை*
8. *யம் செல்லிகுடி வயலில் குழி 500*
9. *ஆண்டியப்ப பண்டாரம் ஆவிடையப்*
10. *ப பண்டாரம் கிளாவயல் குழி 500*

இக்கல்வெட்டில் இரண்டாவதாகக் குறிக்கப்பட்டுள்ள சிவந்தெழுந்த பல்லவராயன் மீது உலாப் பிரபந்தம் ஒன்று பாடப்பட்டுள்ளது. டாக்டர் உ.வே. சாமிநாதய்யர் நூலகத்தில் ஏட்டுச்சுவடியாக இருந்த அந்த வரலாற்று இலக்கியத்தைத் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை முன்னாள் இயக்குநர் டாக்டர். இரா. நாகசாமி அவர்கள் 'கல்வெட்டு' இதழில் பதிப்பித்துள்ளார்கள். இப் பல்லவராயன் காலம் கி.பி. 17 ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதி என்று டாக்டர் இரா. நாகசாமி அவர்கள் கூறியுள்ளார்கள்.

இக்கல்வெட்டில் குறிக்கப்பெற்றள்ள காசித்தம்பிரான் என்பவர் ஸ்ரீ காசி மடத்தைக் காசியில் நிறுவிய ஆதி குமரகுருபர சுவாமிகளாக இருக்கக்கூடும்.

காசித்தம்பிரான் அவர்களுடன் கயிலாச பண்டாரம், ஆண்டியப்ப பண்டாரம், ஆவிடையப்ப பண்டாரம் ஆகிய அடியார்கள் இருந்துள்ளனர். குமரகுருபர சுவாமிகள் அவதரித்த திருத்தலம் ஸ்ரீவைகுண்டத்தில் கயிலாசபுரம் என்னும் பகுதி. கயிலாசபுரத்திற்கும் கயிலாச பண்டாரத்திற்கும் தொடர்பிருக்கலாம்.

காசித்தம்பிரான் அவர்கள் தம்பிரான் என்றும், மற்றவர்கள் பண்டாரம் என்று அழைக்கப்படுவதால் காசித்தம்பிரான் அவர்கள் தலைவர் என்றும், மற்றவர்கள் அவருக்குட்பட்ட அடியார்கள் என்றும் கருதலாம்.

'காசித்தம்பிரான்' என்ற சிறப்புப் பெயரே பிற்காலத்தில் 'காசிவாசி' எனச் சிறப்புடன் அழைக்கப்பட்டிருக்கலாம்.

17ஆம் நூற்றாண்டு வாக்கில் பலர் காசிக்குப் பயணம் சென்றிருக்கின்றனர். அவர்களில் பலர் 'கங்கையாடி' ' காசிக்குப் போய்வந்த' என்ற சிறப்புப் பெயருடன் அழைக்கப்படுகின்றனர். ஆனால் அவர்கள் எவரும் காசிக்கு உரியவர்களாக அழைக்கப்படுவதில்லை. காசியுடன் தொடர்புடைய காசிக்குரிய தம்பிரான் குமரகுருபர சுவாமிகள் அவர்களே என்பது வரலாறு கண்ட உண்மையாகும்.

குமரகுருபர சுவாமிகள் காசியில் இருக்கும்போது இடையில் ஒருமுறை சொந்த ஊர் சென்று வந்ததாகக் கூறுவர். அப்போது குமரகுருபர சுவாமிகள் புதுக்கோட்டை வழியாகச் சென்றபோது ஆலயக்கொடை, திருப்பணி செய்திருக்கலாம்.

பல்லவராயர்கள் புதுக்கோட்டைப் பகுதித் தலைவர்கள். அவர்களுக்குப் பின் புதுக்கோட்டைப் பகுதியில் ஆட்சிக்கு வந்த தொண்டைமான் மரபினர் ஸ்ரீ காசி மடத்துடன் நெருங்கிய தொடர்பு கொண்டவர்கள் என்பது குறிப்பிடத்தக்கது. புதுக்கோட்டை தொண்டைமான்கள் செப்பேடுகள் ஐந்து ஸ்ரீ காசி மடத்தில் உள்ளன.

மேற்கண்ட எல்லாக் கருத்துக்களையும் தொகுத்துப் பார்த்தால் திருக்கோகர்ணம் கல்வெட்டில் 17ஆம் நூற்றாண்டின் இடைப்பகுதியில் குறிக்கப்பட்ட காசித்தம்பிரான் நமது திருமடத்தின் மூலவர் குமரகுருபர சுவாமிகள் என்பது தெளிவாகிறது. காசியுடன் தொடர்பு கொண்ட 17ஆம் நூற்றாண்டு சமயப் பெரியார் நம் குமரகுருபர சுவாமிகளே என்பதால் வெளிப்படையான சான்றுகள் இல்லாவிட்டாலும் இக்கருத்தை ஊகிக்க முடிகிறது.

பிற்சேர்க்கை 2

# நீலப்பாடி ஓலை ஆவணம்

நீலப்பாடியைச் சேர்ந்த அப்புபிள்ளை மக்கள் தம்பி வெண்ணலிங்கம்பிள்ளையும், அண்ணன் இராமசாமிபிள்ளையும் எழுதிக்கொண்ட நெல் ஒப்பந்தத்தை இந்த ஓலை ஆவணம் குறிக்கிறது.

திருப்பனந்தாள் ஸ்ரீகாசிமடத்தில் சேர்த்திருக்கும் நெல்லை அவர்கள் பெற்ற விபரம் கூறப்படுகிறது. காசிமடத்திற்குரிய நிலத்தை அவர்கள் பயிர்செய்திருக்க வேண்டும். இன்றும் நீலப்பாடிப் பகுதியில் ஸ்ரீகாசிமடத்திற்கு நிலம் உள்ளது.

ஆவணம்

I.

1. *சோபகிறது வரு. அற்ப்பிசி மீ உயஎ உ நீலப்பாடியிலிருக்கும் அப்பு பிள்ளை மகன் வெண்ணலிங்க பிள்ளைக்கி ஷையான்*
2. *தமயன் றாமாசாமியா பிள்ளை யெழுதிக் கொடுத்த உடம்படிக்கைச் சீட்டு யென்ன வென்றால் நாம் யிருபேரும் நாளது தேதியில்*
3. *மனறாசியாயி பண்ணிக்கொண்ட விறுத்தி ஆதிரவுகளில் கண்டிருக்கிற பாக விபறம் (ப) டிக்கு நம் யிருவர் பொதுவிலும் நீலப்பாடி*
4. *துண்டு வரும் அய்பேசி வரவேண்டியது திருப்பனந்தாள் ள – ள – ஸ்ரீ காசி சாமி அவர்கள் சன்னிதானத்தில கொட்டி செய்திருக்கிற*

II.

5. *நெல்லை வீறப்பெருமாபிள்ளைக்கு புள் (ளி)க்குடி வாறத்தில் சேறவேண்டிய நெல்லு கோட்டை மைத்த நெல்லில் ஐந்தில் மூனு பங்குக்குள்ள நெல்லு*
6. *தாம் ஷை சன்னிதானத்தில் பெத்துக்கொள்ளூறது இந்தப்படி சம்மதிச்சு வெண்ணலிங்கம் பிள்ளைக்கி றாமசாமியாபிள்ளை*
7. *யெழுதிக் கொடுத்த உடம்படிக்கை இவர்கள் சம்மதியில் கீழ்வேளூர் வைத்திலிங்க முதலியார் நெட்டெழுத்து*
8. *றாமசாமியாபிள்ளை கையெழுத்து சிக்கல் தியாகுமுதலியார் அறிவேன் சிக்கலிருக்கும் சுப்ப வெங்கிட சாஸ்றி அறிவேன்.*

பிற்சேர்க்கை 3

## செப்பேட்டின் நகலாக அபினிமங்கலம் கல்வெட்டுக்கள்

துறையூர்ப் பாளையக்காரரின் இராமேசுவரக் கொடையை முன் தெலுங்குச் செப்பேடு விளங்குகிறது. கொடையாகக் கொடுக்கப்பட்ட அபிநவமங்கலம் இராமேசுவரம் – காசி இரண்டு தலங்களுக்கும் கொடையாக அளிக்கப்பட்டதாக அபினிமங்கலம் கல்வெட்டுக் கூறுகிறது. அக்கொடை காசிமடம் அதிபர் தில்லைநாயகத் தம்பிரான் அவர்கள் வசம் அளிக்கப்பெற்றதாக கல்வெட்டுக் கூறுகிறது.

இக்கல்வெட்டு உள்ள அபினிமங்கலம் திருச்சியிலிருந்து ஒமாந்தூர், புலிவலம் வழியாகத் துறையூர் செல்லும் சாலையில் புத்தனாம்பட்டியிலிருந்து ஒரு கிலோமீட்டர் தொலைவில் அமைந்துள்ளது. கல்வெட்டு இரண்டு பகுதிகளாக அமைந்துள்ளது. இராமேசுவரக் கொடை கிரி தனுஷ்கோடி சாஸ்திரி அவர்களிடமும், காசிக்கொடை தில்லைநாயகத் தம்பிரான் அவர்களிடமும் அளிக்கப்பட்டுள்ளது.

இங்கு அளிக்கப்பட்டுள்ள செப்பேடு தனுஷ்கோடிச் செப்பேடு. இதுபோல் காசிச் செப்பேடு ஒன்று இருந்திருக்க வேண்டும். அபிநவமங்கலம் தெலுங்குச் செப்பேட்டின் நகலான இத்தமிழ்க் கல்வெட்டில் இறுதி ஒம்படைக் கிளவித் தொடர்கள் தெலுங்கில் எழுதப்பட்டுள்ளன.

### கல்வெட்டு

1. *அன்னபூரணி விசாலாட்சி சகாயம் ஸ்வஸ்திஸ்ரீ விசையாப்புதய சா*
2. *லிவாகன சகாற்தம் 1666 கலியுகம் 4845*
3. *யிதின் மேல் செல்லாநின்ற ரத்தாஷ்ச வருசம் பங்குனி மாசம் (27) சுக்கில பட்*
4. *சமத் திசை குருவாரம் உத்திரட்டாதி நெட்சத்திரமும் கூடிய சுப*
5. *தினத்தில் ஸ்ரீமத் ராசாதிராச ராசபரமேசுவர வீரப் பிறதா*
6. *ப ஸ்ரீ கூர வெங்கிடபதிதேவ மகாராயரவர்கள் கனகி*
7. *ரி நகரத்தில் ரெத்தின சிங்காயனத்துக்கு உடையவ*
8. *ராயி பிரிதிவி சாம்ராச்சியம் செயிது வருகுற நா*
9. *ளையில் காசிவாசி தில்லைநாயகத் தம்பிரானவர்க*
10. *ளுக்குச் சதுர்த்த கோத்திரம் செட்டிகுளம் வல்லகுல*
11. *நல்லப்ப ரெட்டியாரவர்கள் பவுத்திரரான லிங்க*
12. *ா ரெட்டியாரவர்கள் புத்திரர் ராஜஸ்ரீ வெங்கடாச*

13. ல ரெட்டியாரவர்கள் எழுதிக் கொடுத்த சிலாசாசன
14. ம் திருசிராபள்ளி சாவடிக்கு வடகரை மழவ நா
15. டு வடவெளி பத்து பாச்சூர் கூத்த(த்)துக் கீழ் பலா
16. த்து மகாணத்துக்கு நாயகமான துறையூ
17. ர் சீமையில் அவனிமங்கலம் யென்கிற கிறாமம்
18. காசியில் அன்னதான தற்ம்மத்துக்கும் ராமீசு
19. வரம் அன்னதான தற்மத்துக்கும் தாரா
20. பூர்வமாயி குடுத்து யிருக்குர படியினாலே
21. ஓமாந்தூர் எல்லைக்கு வடக்கு சா
22. த்தனூர் எல்லைக்கு கிளக்கு கோட்
23. டாத்தூர் எல்லைக்கு தெற்கு புத்தனா
24. பட்டி எல்லைக்கு மேற்கு யிந்த எல்
25. லை னான்கினுக்கும் உள்பட்ட நஞ்சை
26. புஞ்சை மாவடை மரவடை நிதிநிட்
27. க்ஷேப்பூ சல தரு பாஷாணம் ஆ
28. ட்சி ஆகாம சித்த சாத்தியங்களு
29. ம் அஷ்ட்ட போக தேஜ ஸ்வாமியங்களு
30. ம் தானாதி விநிவிக்கிறயங்களுக்கு யோ
31. க்கியமாக ஆசந்திராற்கஸ்தாயியா
32. ய் ஆண்டனுபவித்துக் கொண்டு
33. தற்ம பரிபாலனம் செய்துக் கொ
34. ள்ளுவார்களாகவும் யிந்தப்படிக்கு
35. காசிவாசி தில்லைனாயக தம்பிரான்
36. அவர்களுக்கு சதுற்த கோத்திரம்
37. செட்டிகுளம் வல்லகுல நல்லப்ப ரெ
38. ட்டியாரவர்கள் பவுத்திரர் லிங்கா
39. ரெட்டியாரவர்கள் புத்திரர் ராஜ
40. ஸ்ரீ வெங்கடாசல ரெட்டியாரவ
41. ர்கள் எழுதிக் கொடுத்த சிலா சாச
42. னம்

---

இக்கல்வெட்டுக்களைக் கண்டுபிடித்து ஆவணம் முதல் இதழில் (அக்டோபர் 1991) வெளியிட்டவர்கள் திருச்சி, டாக்டர் மா. இராசமாணிக்கனார் வரலாற்றாய்வு மைய ஆய்வாளர்கள் முனைவர் கு. திருமாறன், மு. வீராசாமி, மு. நளினி ஆகியோர்.

# சொல்லடைவு